*Muracoli*

*Muracu 4, oli 3*

*May 10, 1957*

Record no. 945

# முரசொலி

வார இதழ்

ஆசிரியர்: மு.கருணாநிதி

முரசு 4. | 10—5—57 | வெள்ளி | ஒலி 3





புதிய பல்லவி - பழைய ராகம்!

# சரிந்த செங்கோட்டையிலிருந்து ...

சென்ற 4—5—57 அன்று சென்னை சட்ட மன்றத்தில், கவர்னர் பேருரையின்மீது நிகழ்ந்த விவாதத்தின்போது,

**மு. கருணாநிதி**

பேச்சு

அவைத் தலைவரவர்களே! இன்று மேன்மை தங்கிய கவர்னர் அவர்களுடைய உரையைப் பற்றி நான் போற்றவும் வரவில்லை; தூற்றவும் வரவில்லை; என்னுடைய கருத்துரையை ஆற்றவே வந்திருக்கின்றேன். கவர்னர் அவர்களுடைய உரையைப் பற்றி இங்கு நண்பர்கள் அபிப்பிராயம் தெரிவித்த நேரத்தில்—எதிர்க் கட்சியினரைப் பற்றி இங்கு பேசப்பட்ட நேரத்தில்—குறை கூறுவதையே எதிர்க் கட்சியினர் தொழிலாகக் கொண்டு பேசுகிறார்கள் என்றெல்லாம் குற்றம் சாட்டப்பட்டது. குறைகளை எடுத்துச் சொல்லி நிறை பெறுவதற்காகத்தான் சட்ட மன்றத்திற்கு வந்திருக்கிறோமே தவிர, செய்திருக்கிற காரியங்களைப் பன்னிப் பன்னிச் சொல்லி, அவைகளைப் பாராட்டுவதற்காக நாம் இங்கு வரவில்லை. அத்தகைய காரியங்களுக்காக நடத்தப்படுகின்ற பாராட்டு விழாக்கள் எல்லாம், வெளியிலே அந்தக் காரியங்களால் பயன் பெறுபவர்களால் நடத்தப்படுவது மிகப் பொருத்த முடையது என்பதை நான் இங்கே குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. குறைகளை எடுத்துச் சொல்லி சரி செய்து கொள்வதற்காகவே சட்ட மன்றத்திற்கு வந்திருக்கிறோம்.

## மன்னராட்சி அல்ல; மக்களாட்சி!

அந்தக் காலத்தில் மன்னர்கள், மக்களின் குறைகளைத் தெரிந்து அவர்களுக்கு நல்வாழ்வு நல்குவதற்கு இரவு நேரங்களில் 'நகர் சோதனை' என்ற பெயரால் மாறுவேடம் தாங்கி, மக்களைச் சந்தித்து, அவர்களுடைய குறைகளை எல்லாம் தெரிந்து, கொலு மண்டபத்தில் உட்கார்ந்து, அந்தக் குறைகளைப் போக்கினார்கள் என்று பழைய காலச் சரித்திரத்திலிருந்து படித்திருக்கிறோம். இது மன்னர்கள் ஆளும் காலம் அல்ல; மக்கள் ஆளுகின்ற காலம். இந்தக் காலத்திலும் அதே போல் மந்திரிகள் மாறுவேடம் தாங்கி மக்களின் குறைகளைக் கண்டு வர வேண்டுமென்று நான் கோரவில்லை. நாடகத்திலே அனுபவம் பெற்ற நாங்கள் ஒரு வேளை ஆளும் கட்சியினராக வந்தால், அந்த வேடங்களைப்போட்டு மக்களின் குறைகளைக் கண்டு பிடிக்க முடியும். அந்த அனுபவம் இல்லாத மந்திரிகளை அதைச் செய்ய வேண்டுமென்று நான் கோரமாட்டேன் என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

எதிர்க் கட்சி ஒன்று தேவை என்பது எதையெடுத்தாலும் எதிர்த்துப் பேசுவதற்காக அல்ல என்பதை இங்கு பேசிய பலர் சுட்டிக் காட்டினார்கள். ஆளுகின்றவர்கள் யாரைத் துணைக் கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி வள்ளுவர் பெருமான், தன்னுடைய திருக்குறளில், "பெரியாரைத் துணைக் கோடல்" என்ற அதிகாரத்தில், ஆளுகிறவர்கள் 'பெரியாரை'த் தங்களுடைய துணைவராகக் கொள்ள வேண்டும் என்று கூறியிருக்கிறார். எந்தப் பெரியாரைத் துணைக் கொள்ள வேண்டும் என்று கூறினார் என்றால், எதையும் 'சரி, சரி' என்று சொல்லி கண்டிக்காமல் இருக்கின்ற பெரியாரை அல்ல.

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்..."

என்று வள்ளுவர் குறள் வகுத்திருக்கிறார். சபையிலே ஆளுகின்ற தம்மை இடித்துச் சொல்லுகின்ற பெரியாரைத் துணைவராகக் கொள்ளாத மன்னன் பகைவர்கள் இல்லையாயினும் தன்னைத்தானே கெடுத்துக் கொள்வான்; கெட்டுவிடுவான் என்று சொல்லியிருக்கிறார். அந்த முறையிலே இடித்துச் சொல்வதற்காகவே வந்திருக்கிற பெரியார்களுடைய துணையை ஆளுகின்றவர்கள் பெற வேண்டுமென்று வள்ளுவர் அந்தக் காலத்திலேயே உணர்ந்து சொன்னார் போலும்!

கவர்னருடைய உரையைப் பற்றி இங்கு பேசிய பல நண்பர்கள் "கன்னியாகுமரியை வரவேற்கிறோம்!" என்று கூறியிருக்கிறார்கள். அந்தக் கன்யாகுமரியை நாம் தேவிகுளக் கரையிலோ, அல்லது பீர்மேட்டின் மீதோ நின்றுகொண்டு வரவேற்காமல், சிதைந்து போன செங்கோட்டையின் மேல் நின்றுகொண்டு வரவேற்கிறோம் என்று எண்ணும் போது, தேவிகுளம், பீர்மேட்டைப் பெறுவதற்கு வழிவகை காணப்படவில்லை, கவர்னர் உரையில்-என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

## குளித்தலைத் தொகுதியில் நிலச் சட்டங்களால் நிலவும் அநீதி!

அடுத்து நில சீர்திருத்த சட்டங்களின் பெயரால், நியாய வாரச் சட்டங்களின் பெயரால்; விவசாயிகள் திருப்தி அடைந்து சுமுகமான நிலையில் இருக்கிறார்கள் என்று கவர்னர் அவர்களுடைய உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். என்னுடைய குளித்தலைத் தொகுதியைப் பொறுத்தவரையிலும், திருச்சி மாவட்டத்திலும், இன்றையதினம் இந்த நியாயவாரச் சட்டத்தின் காரணமாகவும், சீர்திருத்தச் சட்டத்தின் காரணமாகவும் எழுந்த வழக்கு உயர் நீதிமன்றம் சென்று, அங்கு அளிக்கப்பட்ட தீர்ப்பின் காரணமாக மக்களுக்கு வேதனையை உண்டாக்கக் கூடிய நிலைமை ஏற்பட்டுள்ளதை யாரும் மறந்துவிட முடியாது; மறுத்து விடவும் முடியாது. விவசாயிகள் வீடுகளில், தங்களுடைய மனைவி மக்களுடன் வேதனையடைந்து புழுங்கிக் கொண்டிருக்கிறார்கள்; குமுறிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் இங்கே எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த நியாய வாரச்சட்டத்தின் காரணமாக குளித்தலைத் தொகுதி, நங்கவரம் பகுதியிலும், திருமாச்சிபுரம் பகுதியிலும், விவசாயிகள் எந்த அளவிற்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை தினம் தினம் பத்திரிகைகளில் வரும் செய்திகளைக் கண்டும், விவசாயிகள் பகுதியில் எழுப்பப் படுகின்ற கூக்குரலைக் கண்டும் எந்த முறையில் அங்கு நிலைமை இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்; திருச்சி மாவட்டத்தைப் பொறுத்த வரையில் அங்கே கையேரு வாரம் என்றும், மாட்டு வாரம் என்றும் இரண்டுவித வாரம் இருக்கின்றன. இப்படி இரண்டு வித மான வாரம் இருப்பதன் காரணமாக அவர்களுக்கு இந்த நியாய வாரச் சட்டம் பயன் படக்கூடாது என்று கருதி அதை விவசாயிகள் பயனடையாத வகையில் உயர்நீதி மன்றத்திற்குச் சென்று அங்கு தீர்ப்பு வாங்கி வந்திருக்கிறார்கள். அந்தத் தீர்ப்பின் காரணமாக விவசாயிகள் நியாய வாரச் சட்டத்தின் பயனை அடைய முடியாமலும், வெளியேற்றத் தடுப்புச் சட்டத்தின் பயனை அடைய முடியாமலும் இருக்கிறார்கள். இன்றைய தினம் உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பு அந்த ரீதியில் வழங்கி இருக்கிறது. அதன் காரணமாக மாட்டு வாரக்காரர்கள் என்றால் யார்; கையேருக் காரர்கள் என்றால் யார்; என்ற பிரச்சினை எழும்பி அதைப் பற்றிய விளக்கத்தை கவனிக்கும்போதுதான் நிலைமை தெரிய வருகிறது. மாடும் தந்து, அவர்களுடைய சொந்த உழைப்பை சிந்தி, நிலம் உடையவர்களிடத்தில் விதை, உரம், எரு — இவைகளைப் பெற்று, அப்படிப் பெறுகிற அந்தப் பொருள்களுக்காக விளைச்சலில் அவர்கள் தனியாக தானியமாகவோ, அல்லது பொருளாகவோ எடுத்துக் கொண்ட பிறகு, 60—40 என்று பெற வேண்டுமென்று சொல்லப்பட்டாலும், இன்றைய தினம் மாட்டு ஏருக்காரர்கள் விவசாயிகள் அல்ல என்று உயர் நீதி மன்றம் தீர்ப்பு வழங்கியிருக்கிறது. அதைப் போலவே கையேருக் காரர்கள் யார் என்றால், அவர்கள் பெரும்பாலும் ஆதி திராவிட வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்—பழங்குடி மக்கள் என்ற பிற்பட்ட மக்கள்—பாட்டாளி மக்கள்! அப்படிப்பட்ட வர்க்கத்தினருக்காகத் தான் இந்த நியாய வாரச் சட்டம் செய்யப்பட்டது. அந்த அடிப்படையில் அவர்களுக்கென்று இந்த நியாய வாரச் சட்டத்தையும், நில வெளியேற்ற தடுப்புச் சட்டத்தையும் கொண்டு வந்தாலும், அவர்கள் அவைகளின் பயனை அடைய முடியாமல் நீதி மன்றம் தீர்ப்பு அளித்து விட்டது. எந்த அடிப்படையிலாவது, எந்த அளவிலாவது இந்த நியாய வாரச் சட்டம் அவர்களுக்கு நன்மை வழங்கியிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். இப்படிப் பட்ட மாட்டு வாரக்காரர்களும், கையேருக் காரர்களும் சாகுபடியாளர்கள் அல்ல என்ற தீர்ப்புக்கு இன்று ஆளாகி யிருக்கின்றனர். அதன்மேல் அப்பீல் செய்யப்பட்டு மீண்டும்வழக்கு வரும் ஜூலை மாதம் மூன்று வது வாரத்தில் எடுத்துக் கொள்ளப் போவதாக இருக்கிறது.

அதற்குள் விவசாயிகளுடைய நிலைமை என்ன வென்றால், முத்து முத்தாக வியர்வை சிந்தி, மணி மணியாக நெற்குவியலைத் தந்தவர்கள் களத்து மேட்டில் காவலர் புடைசூழ அதைக் கொட்டி விட்டு, வீட்டிலே வறுமைத்தேள் கொட்டிட வாடிக் கிடக்கிறார்கள்.

குளித்தலைத் தொகுதியில் இப்போது நிலவி வருகிற இப்

❀ தொடர்ச்சி 8-ம் பக்கம்




வெள்ளி 10—5—57 சென்னை

# வெட்கம்! வெட்கம்!!

“இன்று வாலிபர்களைக் கொடுங்கள்; நாளை உங்களுக்கு புதியதோரு நாட்டையே கொடுக்கிறேன்!”—என்றார் லெனின்.

இளைஞர் பட்டாளம்; அவர்கள் நெஞ்சத்திலே எப்போதும் குமுறிக் கொண்டிருக்கும் உரிமைக் கனல்—இவைதான் பல நாடுகளின் வரலாற்றையே புதிய முறையிலே திருப்பி எழுதியிருக்கின்றன! கேடு புரிவதையே தொழிலாகக் கொண்ட சர்வாதிகாரச் சூதுமதியினருக்குச் சவக்குழிகளைத் தோண்டியிருக்கின்றன!

திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு இதர செல்வங்கள் குறைவாக இருந்தாலும் வாலிபச் செல்வத்திற்குப் பஞ்சம் ஏற்பட்டதில்லை. படித்தவர்கள்; உயர் பதவிகளை உதறி எறிந்தவர்கள்; காதல்—குடும்பம்—உல்லாசம் ஆகியவற்றைத் துறந்துவிட்டு தொண்டு செய்வதையே தொழிலாகக் கொண்ட ‘அரசியல் துறவி’களாய் மாறியோர்—இவர்கள் தொகை ஏராளம்! ஏராளம்!

வெட்டி வா என்றுரைத்தால் கட்டி வரும் வீரர்கள்—வாலிபர் வடிவிலே நமது பாசறையிலே குவிந்து கிடக்கிறார்கள்!

வாலிபர்கள் அணிவகுத்துச் சென்ற போர்ப்படைதான் எந்த நாட்டிலும் வெற்றிமுரசு தட்டியிருக்கிறது!

ஆசிரியச் செல்வங்களும் இப்படித்தான்! இளம் உள்ளங்களில்—பிஞ்சு நெஞ்சங்களில் அறிவு வித்துக்களைத் தெளிப்பவர்கள் அவர்கள்!

ஆசிரியர்களை விரோதித்துக் கொண்டு எந்த நாடுமே உருப்பட்டது கிடையாது. வருங்கால சமுதாயத்தின் வளர்ப்புத் தந்தைகள் அவர்கள்தான்!

புதிய சமுதாயத்தின் தூதுவர்கள் எப்போதும் புதுமையின் பக்கமும்; உண்மையின் பக்கமும் இருப்பதுதான் உலக வழக்கு. அதன்படியே தமிழகத்தில் அவர்களுள் பெரும்பாலோர் அறிவுலகக் கருத்தினை வரவேற்பவர்களாக இருக்கிறார்கள்; இது ஆட்சியாளர்களுக்கும் தெரிந்த உண்மை!

—இந்த இருசாரரும்—வருங்காலத்தைத் தயாரிப்பவர்களும்; வருங்காலமாக இருப்பவர்களும்—தங்களை விடுதலைச் சேனையின் பட்டாள வீரர்களாய் பதிவு செய்துகொண்டார்கள்; பதிவு செய்து கொண்டு வருகிறார்கள்; என்கிற நிலைமை இந்தத் தேர்தல் மூலம் தெளிவு பெற்றபிறகு எக்காலமும் பதவித்தேனில் ஈயாக விழுந்துகிடப்பதையே வாழ்க்கை லட்சியமாகக் கொண்டிருக்கும் காங்கிரஸ்காரர்கள் தங்கள் கவனத்தையெல்லாம் அவர்கள் பால் திருப்பியிருக்கிறார்கள்.

தேர்தல் காலத்தில் ஜனநாயக நங்கையைத் துடிக்கத் துடிக்கக் கொலை செய்து போட்டுவிட்டு; பணம் கொடுத்து ஓட்டுவாங்கிய செயலைப் போலவே; அதிகாரம் தங்களிடம் இருக்கிறது என்னும் ஒரே காரணத்தாலேயே வாலிபர்களையும்; ஆசிரியத் தோழர்களையும் தங்கள் பகட்டு மூலம் கவர்ந்துவிடலாம் என்று முடிவு செய்து வலை விரிக்கத் திட்டமிட்டிருக்கின்றனர், இப்போது!

இந்த சதித் திட்டம் நான்கு சுவர்களுக்குள்ளே; காதோடு காது வைத்தாற்போல் முக்கிய காங்கிரஸ் புள்ளிகள் கூடிக் கலந்து முடிவு செய்ததல்ல.

போதுவாக இளைஞர்களுடனும், செகண்டரிப் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் உள்ள மாணவர்கள், ஆசிரியர்கள் ஆகியோர்களுடன் தொடர்பு—‘நெருங்கிய தொடர்பு’ கொள்ள வேண்டுமென்று வெளிப்படையாகவே அறிக்கை வெளியிட்டிருக்கிறது, காங்கிரஸ் தலைமைப் பீடம்!

இதற்கான விசேஷ நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளுமாறு மாநிலக் காங்கிரஸ் கமிட்டிக்கும் தாக்கீது பிறப்பிக்கப் பட்டிருக்கிறதாம்!

‘குழந்தைகளை அரசியல் ஊர்வலங்களில் சம்பந்தப் படுத்தாதீர்கள்!’

—இப்படிக் கூக்குரலிட்டவர்கள் முன்பு காங்கிரஸ்காரர்கள்!

ஆனால் அதே காங்கிரஸ்காரர்கள் வெளிநாட்டுப் பிரமுகர்கள் விஜயம் செய்யும்போது; பள்ளி செல்ல வேண்டிய பச்சிளங் குழந்தைகளைக் கொண்டு வந்து அணிவகுப்பு நடத்திக் காட்டி; அவர்களது பொன்னான நேரத்தை மண்ணாக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார்கள்!

அது மட்டுமா? தேர்தலில் ஓட்டுக் கேட்டு; வீதி வழியே குழந்தைகள் ஊர்வலம் நடத்திய தீவிரக் காங்கிரஸ் வாதிகளையும் நாமறிவோம்!

‘மாணவர்களை அரசியலில் ஈடுபடுத்தாதே!’—இப்படிக் கோஷித்தவர்களும் அவர்களேதான்!

நாம் மாணவர்களை நேரடியாக அரசியல் களத்திற்கு இழுத்தது கிடையாது. நீங்கள் படிக்கும் பருவத்தில் அரசியலுக்கு வரவேண்டாம்; ஆனாலும் அரசியற் கருத்துக்களைத் தெரிந்து கொள்ளுங்கள்—என்றுதான் கூறிவந்தோம். அப்படி நமது கொள்கைகளையும் குறிக்கோளையும் தெரிந்துகொள்ள அக்கரை காட்டிய மாணவர்களுக்கெல்லாம் தொந்தரவு கொடுத்தார்கள்; தேர்வில் வெற்றி தர மறுத்தார்கள்; பலரது வருங்கால வாழ்க்கைதனையே குட்டிச்சுவராக்கிய ‘பாவ’த்திற்கும் ஆளாகியிருக்கிறார்கள் அவர்கள்!

முதலில் தந்திக் கம்பியை அறுப்பதற்கும்; தபால் ஆபீஸ்களைக் கொளுத்துவதற்கும் மாணவர்களைப் பயன்படுத்திய அவர்கள்தான்; இன்று அந்த மாணவர் பரம்பரை தன் தவறினை உணர்ந்து; தாய் நாடு காத்திடத் தயாராகியிருக்கும் இந்த நேரத்தில் தடை விதித்துவிட்டு; இப்போது மீண்டும் அவர்கள் தயவு தேவை என்னும் போது ‘படிப்பு வேண்டாம்; எங்களுக்கு வோட்டு சேகரித்துத் தர வாருங்கள்’ என்கிற முறையிலே தங்கள் பிரச்சாரத்தைத் துவங்கியிருக்கிறார்கள்!

ஆசிரியர்களைப் பார்த்து; “நீ எந்தவித அரசியல் கட்சியிலும்—குறிப்பாகக் காங்கிரசைத் தவிர்த்த எதிர்க் கட்சியிலும்—சேராதே” என்று மிரட்டினார்கள்.

அவினாசியார் நிதி அமைச்சராயிருந்த காலத்திலே பகுத்தறிவுக் கொள்கையிலே பற்று வைத்திருந்த ஆசிரியர்களுக்கு வேண்டுமென்றே இழைக்கப்பட்ட அநீதியை நாம் மறந்துவிடுவதற்கில்லை.

இன்று அவர்கள்தான் ஆசிரியர்களையும்; கல்லூரிப் பேராசிரியர்களையும் அடுத்த தேர்தலை மனதில் வைத்துச் கொண்டு இரு கையேந்தி வரவேற்க முன் வந்திருக்கிறார்கள்!

வெட்கம்! வெட்கம்!! மானங் கெட்ட செயல்!!!

வாலிபர்களையும், மாணவர்களையும், ஆசிரியர்களையும் உதைத்தார்கள்! இன்று முத்தமிடத் துடிக்கிறார்கள்!

அந்தோ பரிதாபம்! இவர்களது எத்து வேலைகளுக் கெல்லாமா வாலிபத் தோழர்களும் ஆசிரியர்களும் மயங்கிவிடப் போகிறார்கள்?

## இரு எழுத்தாளர்கள்

*தமிழகத்தின் நல்ல பல எழுத்தாளர்களின் வரிசையில் இடம் பெற்று, தொடரோவியம்—சிறுகதை—கட்டுரை ஆகியவற்றில் சிறந்து விளங்கியவரும், எழுத்தாளர் சங்கத்தில் இருமுறை தலைவராகப் பணியாற்றியவருமான தேவன், திடீரென மறைந்துவிட்ட செய்தி கேட்டு நெஞ்சு நெகிழ்ந்தோம். சொற்சித்திரம் தீட்டுபவராக மட்டுமின்றி, நற்குண சீலராகவும் திகழ்ந்த நண்பரின் மறைவு எழுத்துலகிற்கே பெரும் இழப்பு. அவரது குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த ஆனுதாபங்கள் உரியதாகுக.*

*ஒன்றையடுத்து, மற்றொன்று எனும் விதத்தில் ஒளிமிக்க வசனகர்த்தாவாக விளங்கிய தோழர் டி. கே. கோவிந்தன் நமைப் பிரிந்தார் என்ற சோகச் செய்தி ஈட்டியெனத் தைக்கிறது! நல்ல தமிழ் நடை எழுதும் நண்பர்—முன்னேற்றப் பாதையிலே நடைபோட்ட தோழர்—அவரை சாவு கொத்திக் கொண்டு போய்விட்டது—அவரது குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த வருத்தத்தை அறிவித்துக் கொள்கிறோம்.*

சிறுகதை




# கூம்பிய தாமரை!

சேகர் ஓவியம் தீட்டிக் கொண்டிருந்தான். திரைச் சீலையில், எண்ணங்களுக்குத் தூரிகையின் துணை கொண்டு வடிவம் கொடுத்துக் கொண்டிருந்தான்! வண்ணங்கள் அவன் கை பட்டுப் புது வண்ணம் பெற்றுப் பொலிந்தன.

சுந்தரி வந்ததைக்கூட அவன் கவனிக்கவில்லை! கலையிலே உள்ளம் தோய, கலையும் கலைஞனும் ஒன்றாகி விட்ட நேரம் அது! ஓவியம் ஒன்றைத் தவிர, உலகமே அவன் கண்ணிலிருந்து — கற்பனையிலிருந்து மறைந்து விட்ட நேரம்!

சுந்தரியும் அந்த ஓவியத்தில் லயித்து நின்றாள்! கலையில் ஈடுபட்ட அவள் உள்ளத்தில் கலை சற்று நேரம் நின்று மறைந்தபின் கலைஞன் தோன்றினான். அவன் மட்டும் அந்த இதயத் திரைச் சீலையிலிருந்து மறையவே இல்லை!

தீட்டிய ஓவியத்தை சரி பார்க்க எழுந்து சற்று பின்னால் வந்தான்.

"சபாஷ்!" என்றாள் அந்தக் குறும்புக்காரி.

குயிலைப் பழித்த குரல் கேட்டுத் தன் நினைவு பெற்றான் சேகர்! அவளைப் பார்த்தான். அவனுடைய கற்பனைக்குச் சவால் விடும் பேரெழிலோடு நின்று கொண்டிருந்தாள், சுந்தரி!

அவன் கண்களை அவனால் நம்ப முடியவில்லை; மூன்றே மாதங்கள்தான் இடையில்! அதற்குள் எவ்வளவு மாறுதல்! காலதேவனின் கை பட்டவுடனே இந்தப் பெண்களின் உடலில்தான் எவ்வளவு மாற்றம்! ஏதுமறியா இளம் பருவத்துக் கண்களில், இப்பொழுது இவ்வளவு கற்பனை எப்படி ஊற்றெடுத்துப் பெருகுகிறது! இந்த உதடுகளுக்குத்தான் இவ்வளவு சிவப்பு எங்கிருந்து வந்தது! மேனியிலே விரவி நிற்கும் மெருகு...பெண்மையின் மலர்ச்சியை முத்திரை யிட்டுக் காட்டும் அங்கப் பொலிவு...

ஏழு நிறங்களையும் சேர்த்து, எட்டாத கற்பனையையும் எட்டிப் பிடித்து, ஓவியம் தீட்ட முயன்றாலும், சுந்தரியைப் பொறுத்த மட்டில் கலைக்கும் கலைஞனுக்கும் தோல்விதான் ஏற்படும் என்று அவன் எண்ணினான்.

"ஏன், சுந்தரி; இத்தனை நாட்களாக நீ ஏன் இங்கு வரவில்லை....?"

இந்த அசட்டுக் கேள்விக்கு அவள் என்ன பதில் சொல்லுவாள்? ஆனால் கலைஞனும் குழந்தைதானே!

அவள் நாணித் தலை கவிழ்ந்தாள்! கன்னங்கள் கன்றிச் சிவந்தன!

அவனுடைய கற்பனை விரிந்தது. எட்டாத மரக் கிளையில் அவள் ஏறமுடியாமல் தவித்த போது அவளைத் தோளிலே தூக்கி ஏற்றி விட்டது; சொன்னதைக் கேட்காதபோது அடித்து அழவிட்டு, பின் அவள் அழுவதைக் காணப் பொறுக்காமல் அவள் கண்ணீரைத் துடைத்து ஆறுதல் சொன்னது; கடித்துக் கொடுத்தமிட்டாயை அவள் சாப்பிட்டபோது, எச்சிலைச் சாப்பிட்டுவிட்டாள் என அவன் கேலி பேச, அவள் 'டு' விட்டு விட்டு ஓடி மறைந்தது... இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள்!

ஆனால் இடையிலே மூன்று மாதங்கள்தான்! இப்பொழுது அந்த உரிமையை அவளிடத்திலே அவன் எடுத்துக்கொள்ள முடியுமா என்ன?

குதித்துக் கூத்தாடி, 'கலகல' வென்று சிரித்துப் பேசும் அவள், இப்பொழுது ஏன் அச்சடித்த பதுமையாய் நிற்கிறாள்?

"பேசமாட்டாயா, சுந்தரி?"

அவள் நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். தென்றலிலே அசைந்தாடும் தளிர்போல அவளுடைய உதடுகள் துடித்தன. வாய் பேசவில்லையே தவிர, 'நயன பாஷை'யிலே எவ்வளவோ பேசினாள்!

சுந்தரியைப் பார்க்கும்போது இதுவரையில் தோன்றாத சலனம், இப்பொழுது அவன் உள்ளத்தில் தோன்றியது.

"ஓவியம் எப்படி சுந்தரி?"

"நன்றாயில்லை!" என்றாள் அவள். முன்பெல்லாம் அவன் தீட்டிய படங்களின் மீது குறும்புத்தனமாக அவள் வர்ணத்தை எடுத்துத் தெளித்து விடுவாள். அப்பொழுது அவனுக்குக் கட்டுக்கடங்காக் கோபம் ஏற்படும். கோபம் கணப்பொழுதுதான் இருக்கும். அவளோடு மீண்டும் 'சினேகம்' ஆகிவிடுவான். ஆனால், மூன்று மாதங்களுக்குப் பிறகு, பொறுமையாக — அமைதியாக அவனுடைய ஓவியம் 'நன்றாயில்லை' என்று அவள் அளித்த தீர்ப்பு. அவனுடைய மனதை யாரோ ஆயிரம் சம்மட்டி கொண்டு அடிப்பதுபோலிருந்தது.

"ஏன் சுந்தரி?" என்று ஏக்கமாக அவளைப் பார்த்தான்.

"பின் என்னவாம்? சூரியன் உதிக்கும்; தாமரை மலரும்! இதுதான் இயற்கையான கற்பனை. ஆனால் உன்னுடைய படத்தில் சூரியன் மறைகிறது; தாமரை இதழ்களை மூடிக் கொள்ளுகிறது...," என்றாள் அவள்.

"காலை நேரத்தை ஓவியத்தின் நிலைக்களனாக அமைத்தால், நீ சொல்லுகிறபடி படம் இருக்கும்...என்னுடைய ஓவியம் மாலையை வர்ணிக்கிறது...," என்று சமாதானம் சொன்னான் அவன். காரணத்தைக் கேட்டு, பதிலும் சொன்னவுடன் தான் அவனுக்கு ஆறுதலாக இருந்தது.

"சேகர், நான் இனிமேல் உன்னைப் பார்க்க அடிக்கடி வர முடியாது..."

அவனுக்கு விஷயம் இப்பொழுது அறைகுறையாகப் புரிந்திருந்தது.

"இப்பொழுது மட்டும் எப்படி வந்தாய்?"

"அப்பா, அம்மா வெளியே போயிருக்கிறார்கள்...அவர்கள் வரும் நேரமாகி விட்டது... உன்னைப் பார்த்துப் போகத் தான் வந்தேன்...நான் வரட்டுமா?"

"இரு சுந்தரி! மல்லிகையென்றால் உனக்கு நிரம்பப் பிடிக்குமே; கொல்லையில் குண்டு

**பி.சி.கணேசன்.**
பி.எஸ்ஸி.,பி.டி.

மல்லிகை நிறையப் பூத்திருக்கிறது...பறித்துக் கொண்டு வருகிறேன்!"

அவள் பதிலுக்குக் காத்திருக்காமல், கொல்லைப்புறம் ஓடினான். கைநிறைய குண்டு மல்லிகையைப் பறித்துக்கொண்டு வந்தான். பாவம். அவன் அன்போடு கொடுப்பதை ஏற்றுக் கொள்ள சுந்தரி அங்கில்லை! 'கல் கல்' என்று மேற்கத்தி மாடுகளின் சலங்கையொலி தெருக் கோடியில் கேட்டது. வாசற்படியில் வந்து எட்டிப் பார்த்தான். சுந்தரியின் பெற்றோர்கள் வண்டியில் வந்து கொண்டிருந்தார்கள்.

கையிலிருந்த பூக்களை அப்படியே கீழே கொட்டினான்! எங்கிருந்தோ கிளியொன்று 'கீச் கீச்' சென்று தன்னுடைய ஜோடியை அழைத்துக்கொண்டிருந்தது!

★

அதற்குப் பின் அவன் சுந்தரியைப் பார்க்கவேயில்லை. மாடுகளின் சலங்கையொலி கேட்கும்போதெல்லாம் ஆவலோடு வெளியே வந்து எட்டிப் பார்ப்பான். யார் யாரையோ அந்த வண்டி ஏற்றிச் சென்று கொண்டு இருந்தது. ஆனால் சுந்தரியை மட்டும் அவன் காணவேயில்லை!

மாதங்கள் மறைந்தன. கொல்லுங் கடுங்குளிர் ஒழிந்து. தையும் பிறந்தது. அதற்குப் பிறகு அவன் படமேதும் எழுதவில்லை; எழுதிய அந்தப் படமும் கவனிப்பாரற்றுத் தூசி படிந்து கிடந்தது. ஓவியக் கலயங்கள் ஆங்காங்கே சிதறிக் கிடந்தன.

சுந்தரியின் வீட்டுக்குப் புதியவர்கள் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தார்கள். அவள் வீடு புதுப்பிக்கப்பட்டது...சேகரனோ எதையுமே வெறுப்போடு பார்த்தான்.

ஒரு நாள் காலை, அவன் எழுந்து வெளியே பார்த்த போது திடுக்கிட்டுப் போனான். சுந்தரியின் வீட்டு வாயிலில் பிரம்மாண்டமான பந்தல் போட்டுக்கொண்டிருந்தார்கள்... ஆற்றுக்குச் செல்லும் பெண்கள் பேசிக்கொண்ட பேச்சு அவனுடைய சந்தேகத்தைத் தெளிய வைத்தது.

சுந்தரிக்குத் திருமணம்! அவளுக்குக் கணவனாகப் போகிறவன் கலெக்டராம்!

அவன் யாராயிருந்தால் அவனுக்கென்ன? சுந்தரியிடம் அவன் இனி சொந்தம் கொண்டாட முடியாது.

சிறுமியாக இருந்த சுந்தரியோடு மணல் வீடு கட்டிய போதும், மரமேறிப் பிடித்து விளையாடியபோதும் அவன் எந்த உறவையும் சிந்தித்துப் பார்த்ததே கிடையாது. மூன்று மாதம் முகதரிசனம் தராமல், அஞ்ஞாத வாசமிருந்த பின் அழகுச் சுமையாய் அவன்முன்

* 8-ம் பக்கம் பார்க்க

# கருங் கடல் மூழ்கினேம்; கட்டாணி முத்தெடுத்தோம்!

[6—7—57 அன்று அமைந்தகரை பொதுக்கூட்ட சொற்பொழிவின்சுருக்கம்]

அறிஞர் அண்ணா அவர்கள் தம்பிகள் உங்களை சந்திப்பார்கள்; அவர்களோடு உங்கள் கருத்துக்களை பறிமாறிக் கொள்ளுங்கள்' என்று சொல்லிவிட்டு, எங்களை உங்கள் முன்னிலையிலே நிறுத்தி விட்டு, அவர்கள் வேறு கூட்டத்திற்கு சென்று விட்டார்கள். அண்ணா அவர்கள் சொற்பொழிவாற்றி சென்ற பிறகும், எங்களுடைய கருத்துக்களை கேட்பதற்காக நீங்கள் இங்கே அமர்ந்திருக்கிறீர்கள் என்றால், உள்ளபடியே திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய கருத்துக்கள்—கொள்கைத் திட்டங்கள்—யாரால், எத்தனை முறை திரும்பத் திரும்ப சொல்லப்பட்டாலும் அது மக்கள் மன்றத்தால் வரவேற்கப்படுகிறது; அதற்கு புதிய உற்சாகம் தரப்படுகிறது; என்பதைத்தான் நீங்கள் அமைதியாக இருந்து இந்தக் கூட்டத்தை வெற்றிகரமாக நடத்தித் தருவதின் மூலமாக எங்களுக்கு புலனாகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்திலே பதினைந்து பேர் இன்றையதினம் சட்ட மன்றத்திற்கு சென்றிருக்கிறோம் என்பதும்; அது இந்த நாட்டிலே இருக்கின்ற லட்சோப லட்சம் மக்களால் பெரிதும் பாராட்டப்படுகிறது என்பதும்; நாள் தவறினாலும் பாராட்டுக் கூட்டங்கள் தவறுவதில்லை என்பதும் நீங்கள் அறிந்த ஒன்றாகும். நாம் வெற்றி பெற்றவர்களோ பதினைந்து பேர்; தென்னாட்டுக்குப் புறம்பான கொள்கைகளை வைத்திருக்கின்ற காங்கிரஸ் இயக்கத்தினரும் அவர்களுடைய பட்டியலைக் காட்டுகிறார்கள்; 'பார்! பார்! 150 பேர்!' என்று. ஆனால் மக்களுடைய உற்சாகம் கலந்த வரவேற்பும் வாழ்த்தும், அந்த 150 பேர் பக்கத்திலில்லை; இந்த 15 பேருடைய பக்கத்தில்தான் இருக்கிறது.

நாள் தோறும் பாராட்டு விழாக்கள். நாங்களே அலுத்துக் கொள்கிற அளவுக்கு, 'போதுமப்பா பாராட்டுவது' என்று நாங்களே கூறுகிற அளவுக்கு நடைபெறுகிறது. இந்தப் பதினைந்தை திராவிடம் எப்படிப் பெற்றிருக்கிறது; அந்த நூற்றி ஐம்பதை "அகில இந்தியா" எப்படிப் பெற்றிருக்கிறது என்று கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால் 'நாம் மிக மிகத் தொல்லைகளுக்கிடையே, மிகமிகக் கஷ்டத்திற்கு இடையிலே சம்பாதித்தது இந்தப் பதினைந்து! ஆழமான கடலில் மூச்சடக்கி, பலப்பல சுறாக்களுக்கெல்லாம் தப்பி நன் முத்துக்களை எடுத்ததைப் போல 15 முத்துக்களை எடுத்திருக்கிறீர்கள் நீங்கள்! அவர்களோ இந்த முத்தெடுக்கிற கஷ்டத்தை அந்த 150 பேரைப் பொறுக்குகிற நேரத்தில் அனுபவிக்கவில்லை!

தங்கச் சுரங்கத்திலே பாறைகளுக்கு இடையே, எந்த நேரத்தில் வெடித்திருக்கிற பாறைகள் திடீர் விபத்துக்கு ஆளாகி தங்கமெடுக்கச் சென்றவன் இறந்து விடுவானோ; அழிந்து விடுவானோ; என்கின்ற கலக்கத்திற்கிடையே—உள்ளே நுழைந்த தொழிலாளி பாறைகளை வெட்டி, வெட்டப்பட்ட பாறைகளிலே எந்த அளவுக்கு தங்கம் கலந்திருக்கும் என்கிற ஆராய்ச்சியிலே ஈடுபடுவதற்குக்கூட நேரமில்லாமல், தங்கம் கலந்திருக்கின்ற அந்தப் பாறைகளை எடுத்து வந்து, பிறகு அதை உருக்கி ஒன்றாக்கி, அதிலிருந்து எடுக்கின்ற தங்கத்தைப் போன்றது, இந்தத் திராவிடம் பெற்றிருக்கிற பதினைந்து!

ஆறு கடந்து, அதைத் தொடர்ந்து சேறு கடந்து—ஊறு பல கடந்து – தோட்டத்திலே புகுந்து, முள் நிரம்பிய செடியிலே இருக்கின்ற ரோஜாவை அழகான குமரியுடைய கரங்கள் பறிக்கிறதே; முள்ளுக்கும் அஞ்சாமல்—அப்படிப் பறித்த ரோஜாக்கள் தான் இந்தப் பதினைந்து!

ஆனால் இப்படிப் பறித்த ரோஜாக்கள் அல்ல அந்த 150! அவைகளெல்லாம் பணத்தால் வெற்றி பெற்ற ராஜாக்கள்! ஆகவேதான் அந்த 150 சுலபமாகக் கிடைத்தது அவர்கட்கு! பணமிருந்தது; பத்திரிகை பலமிருந்தது; படை இருந்தது; அதிகாரமிருந்தது; அந்த அதிகாரத்தைப் பிரயோகிக்கின்ற ஆணவம் இருந்தது; இவ்வளவும் இருந்த காரணத்தால் அவர்கள் அதிக இடங்களைப் பெற்றார்கள். எப்போதுமே சுலபமாகக் கிடைப்பதற்கு அவ்வளவு பாராட்டு இருக்காது. தேடித் தேடி அலுத்து, கஷ்ட நஷ்டங்களை ஏற்று, வேதனை புரியிலே பயணம் நடத்தி கிடைப்பது இருக்கிறதே, அதற்கு அதிகமான பாராட்டு நிச்சயமாக இருக்கும். ஆகவேதான் நீங்கள் பாடுபட்டுத் தேடியதைப் பாராட்டுகிறீர்கள்; பாடுபடாமல் வந்ததை பாராட்டுவதற்கு யாரும் தயாராக இல்லை!

நாம் சட்ட மன்றத்திற்கு சென்றிருக்கிற நேரத்தில், நம்மைச் சூழ்ந்திருக்கின்ற எதிர்க்கட்சித் தோழர்கள், பங்காளிகள், நம்மை விட்டுப் பிரிந்தவர்கள், அல்லது அவர்களிடமிருந்து நாம் விடுவித்துக் கொண்ட நிலைமையிலே நமக்கும் அவர்களுக்கும் வேறு வேறு சூழ் நிலைகளில் அமைந்தவர்கள்—இவர்களெல்லாம் நம்மைப் பார்த்துக் கேட்கிறார்கள் "சட்ட சபைக்குச் சென்று விட்டால் திராவிட நாடு கிடைத்து விடுமா?" என்று. இந்த நேரத்தில் மாத்திரம் அவர்கள் நம்மைப் பார்த்து இந்தக் கேள்வியைப் போடுகிறவர்கள் அல்ல; நாம் எந்தக் காரியம் செய்தாலும் "இதைச் செய்தால் திராவிட நாடு கிடைக்குமா?" என்று கேட்டவர்கள்.

நாம் வேட்டிக் கட்டிக் கொண்டு வந்தால், "வேட்டி கட்டிக் கொண்டு வந்தால் திராவிட நாடு கிடைக்குமா?" என்று கேட்பார்கள். சரி, வேட்டி வேண்டாம்; கால் சட்டைப் போட்டுக் கொண்டு வருவோமென்று வந்தால், "கால் சட்டைப் போட்டால் திராவிட நாடு கிடைக்குமா?" என்று கேட்பார்கள்.

கல்லக்குடிப் போராட்டத்திலே ஈடுபட்ட நேரத்தில், "கல்லக்குடியிலே போராட்டம் நடத்தி விட்டால் திராவிட நாடு கிடைக்குமா?"—என்று கேட்டார்கள்.

கல்வித் திட்ட எதிர்ப்புப் போராட்டம் நடத்திய நேரத்தில், "கல்வித் திட்டத்தை எதிர்த்து விட்டால் திராவிட நாடு கிடைத்து விடுமா?" என்று கேட்டார்கள்!

நேரு அவர்கள் நம்மையெல்லாம் பார்த்து 'நான்சென்ஸ்' என்று கூறிய நேரத்தில், ரயில் நிறுத்தப் போராட்டம் நடத்தியபோது, "ரயிலை நிறுத்தித் தண்டவாளத்தின்மேல் படுத்து விட்டால் மட்டும் திராவிட நாடு கிடைத்து விடுமா?" என்று கேட்டார்கள்!

திரை யுலகத்தின் மூலமாக நமது அறிவுக் கருத்துக்களைப் பரப்பிய நேரத்தில் "ஒரு சில கருத்துக்களுக்கு இடம் கிடைத்த காரணத்தால் திராவிடநாடு கிடைத்து விடுமா?"— கேட்டார்கள்!

சந்திரோதயம், சந்திரமோகன், வேலைக்காரி, ஓர் இரவு, மணி மகுடம், தூக்கு மேடை, சர்வாதிகாரி, இலட்சியவாதி—போன்ற நாடகங்கள் நடத்தப்பட்ட நேரத்தில், அந்தப் படங்கள் வெளிவந்த காலத்தில், "இவற்றால் திராவிடநாடு கிடைத்துவிடுமென்று கருதுகிறீர்கள்?" என்று கேலியாகக் கேட்டார்கள்!

இப்படி, நாம் எந்தக் காரியம் செய்தாலும் நம்கொள்கை நிறைவேறி விடுமா—என்று கிண்டல் பேசியவர்கள்தான் இன்றையதினமும் சட்ட மன்றத்திற்கு செல்கின்ற நேரத்திலும் அதேபாதையில் நின்று—அதேபாணியிலே கேட்கிறார்கள்.

உள்ளபடியே நான் சொல்ல விரும்புகிறேன், வாழ்க்கையிலே நாம் அடிக்கடி காணுகிற நிகழ்ச்சிகள் மூலம்! காதலனும் காதலியும் சந்தித்து, ஒருவரையொருவர் கண்களால் பார்த்துக் கொள்ளும் நேரத்தில், அதை ஒரு விஷமக்காரன் கவனித்து விட்டு, "இவர்கள் இருவரும் இப்படி அடிக்கடி கண்ணோடு கண்ணினை நோக்கிக் காதல் புரிகிறார்களே, அதனால் இவர்களுக்குக் குழந்தை பிறந்து விடுமா?" என்று கேட்கிறான். பிறகு அடுத்த நிலைமை — இரண்டு வாரங்கள் கழித்து, அவர்களை கடற்கரையிலே, வெண் மணலிலே, வெள்ளி நிலவுக்குக் கீழே, அலைகளிலே தங்களுடைய கால்களை நனைத்துக் கொண்டு அமர்ந்திருக்கிற காட்சியைப் பார்க்கிறான் அவன். அப்போது "இப்படி அலைகளிலே கால்களை நனைத்துக் கொண்டு, சீதள நிலவுக்குக் கீழே சிங்காரமாக அவளும், ஒய்யாரமாக அவனும் உட்கார்ந்திருந்தால் இவர்களுக்குக் குழந்தை பிறந்து விடுமா?" என்று கேட்கிறான். பிறகு ஒரு நாள், தென்றல் வீசுகின்ற சோலையிலே, மந்தமாருதத்தை ரசித்தபடி அந்த மங்கையும், அந்த அழகனும் காதல் கீதம் இசைப்பதைப் பார்த்து, "இவர்கள் இருவரும் இப்படி காதல் இசை பாடி விட்டால் மட்டும் குழந்தை பிறந்து விடுமா?" என்று கேட்கிறான். அதற்கும்

# எலும்புகளை ஒடிக்க வேண்டுமோ ; இரத்தத்தால் எழுத வேண்டுமோ ?

பிறகு, அவர்கள் இருவருக்கும் திருமணம் நடைபெறுகின்ற அழைப்பிதழைக் காணுகிறான். அப்போதும்கூட "இவர்கள் இருவருக்கும் திருமணம் நடந்து விட்டால் குழந்தை பிறந்து விடுமா?" என்று கேட்கிறான். திருமணம் நடந்து முடிந்த பிறகு, பெற்றோர்கள் வைதீகர்களாக இருந்தால் நாள் நட்சத்திரம் பார்த்து; அல்லது காதலர்கள் அவசரக்காரர்களாய் இருந்தால் நாள் நட்சத்திரத்திற்கே நேரமில்லாமல்; பள்ளியறைக்குள்ளே புகுந்துவிடும் நேரத்தில், வெளியே நின்று, "இவர்கள் பள்ளியறைக்குள் சென்றுவிட்டால் குழந்தை பிறந்துவிடவா போகிறது?"—என்று கேட்கிறான். — இப்படியே அவன் கேட்டுக் கொண்டே யிருந்தால், அவன் ஏன் இப்படி அவர்களைச் சுற்றிக் கொண்டே இருக்கிறான் என்ற கேள்வி நமக்கு எழும். அது மாத்திரமல்ல; பள்ளியறையிலே சென்றவர்கள் பள்ளி யறையிலேயே தான் பிரசவத்தை வைத்துக் கொள்ளுவார்கள் என்று வழக்கம் கிடையாது! நீங்கள் அதே காதலர்களுடைய நிலைமையை திராவிட முன்னேற்றக் கழகத்தின் நிலைமையோடு கொஞ்சம் இழுத்து வந்து பார்ப்பீர்களேயானால், நாம்; கடற்கரையிலே சந்தித்தது போன்ற கல்லக்குடி போராட்டம் நடத்திய நேரத்திலே — திருமணப் பத்திரிகை அடித்து திருமணம் செய்து கொண்டதைப் போல 'நான் சென்ஸை' எதிர்த்து ரயில் நிறுத்தப் போராட்டம் நடத்திய நேரத்தில்—'குழந்தை பிறந்துவிடுமா?—என்று கேட்டது போல, "திராவிட நாடு கிடைத்துவிடுமா?"-கேட்டார்கள். இன்றைய தினம் பள்ளியறைக்குச் சென்றிருக்கிறோம்; சட்ட மன்றத்திற்கு சென்றிருக்கிறோம்; "குழந்தை பிறந்துவிடுமா?" என்று கேட்கிறார்கள்; "திராவிட நாடு கிடைத்துவிடுமா?" என்று கேட்கிறார்கள்! குழந்தை பிறக்கிற இடம்; அதைப் போலவே திராவிட நாடு கிடைக்கிற இடம்-பள்ளியறை அல்ல என்பது எங்களுக்குத் தெரியும்; சட்ட மன்றம் அல்ல என்பதும் எங்களுக்கு நன்றாகத் தெரியும். குழந்தை பிறக்கிற இடம் பிரசவ அறை; அல்லது 'ஆப்பரேஷன் கேஸா' யிருந்தால் ஆஸ்பத்திரி! அதுவும் திராவிடநாடு என்ற குழந்தை பிறப்பது அவ்வளவு சுமுகமான பிரசவமாயிருக்காது; சுகப் பிரசவமாக இருக்க முடியாது ஆகவே பிரசவ அறையிலே தான் நடக்கும் என்று நாங்கள் கருதமுடியாது! 'ஆப்பரேஷன்' செய்து அந்தக் குழந்தையை எடுக்க வேண்டிய நிலைமையிலே—ரத்தம் சிந்த வேண்டிய நிலைமையிலேகூட அந்தக் குழந்தை பிறக்க நேரிடலாம்! ஆகவே தான் அவசரக்காரர்களே! அவசரக்காரர்களே!! கண்ணோடு கண்ணினை நோக்கக்கூடிய நேரத்திலே நீங்கள் கேட்கா தீர்கள் குழந்தை பிறக்குமா?—என்று! பிரசவ அறையை, ஆஸ்பத்திரியைப் பார்த்து விட்டு — தகதகவென தங்க நிறமாக ஜொலிக்கிற அந்த அழகான திராவிட நாடு குழந்தையைப் பார்த்துவிட்டு நீங்கள் கேட்பீர்கள்; திராவிட நாடு கிடைத்துவிட்டால்கூட திராவிட நாடு கிடைத்துவிடுமா?—என்று! அத்தகைய அரசியல் அப்பாவிகள்!

அவர்களுக்கிடையேதான் திராவிட முன்னேற்றக் கழகம் எட்டாண்டு காலமாக தன்னுடைய நீண்ட இலட்சியப் பயணத்தை நடத்தி வந்திருக்கிறது. அந்தப் பயணத்திலேதான் — திராவிட நாடு கிடைப்பதற்கான பலப்பல மார்க்கங்களிலே ஒன்றாகத்தான்-திராவிட முன்னேற்றக் கழகம் சட்ட மன்றத்திற்கு செல்கிறதே ஒழிய, சட்ட மன்றத்திலே அண்ணாவுடன் பதினைந்து பேர் அமர்ந்து விடுகின்ற காரணத்தால் நம்முடைய லட்சியம் பூர்த்தியாகி விட்டது என்றல்ல பொருள்!

1949-ம்—ஆண்டு, கண்ணீர்த் துளிகளுக்கு இடையே-கனத்த மழைக்கிடையே—அறிஞர் அண்ணாவுடைய வேதனை நிரம்பிய பிரசங்கத்திற் கிடையே—எழுந்த திராவிட முன்னேற்றக் கழகம் சட்ட மன்றத்திற்குச் சென்றதும், தன்னுடைய கொள்கை—லட்சியம் நிறைவேறி விட்டது என்று, அந்த சரித்திரப் புத்தகத்தினுடைய கடைசி வரியை எழுதிமுடித்து விட்டு, 'நாங்கள் சட்ட மன்றத்திற்கு சென்று விட்டோம்; ஆகவே எங்கள் சரித்திரம் முற்றும்' என்று அந்தப் புத்தகத்தை மூடிவைத்து விட்டு போவதில்லை. அத்தகைய சட்டமன்றப் பிரவேசம் எங்களுடைய வரலாற்றில் — விடுதலைச் சரித்திரத்தில்— 10-வது பக்கமாக, அல்லது 15-வது ஏடாகத்தான் இருக்க முடியுமே தவிர; இரண்டாவது அத்தியாயமாக; அல்லது மூன்றாவது அத்தியாயமாகத்தான் இருக்க முடியுமே தவிர; முழுமை அடைந்த சரித்திரமல்ல இது! முழுமை அடையும் சரித்திரம் வெறும் மையினால் எழுதப் படுமோ ; அல்லது இரத்தத்தால் எழுதப் படுமோ, மயிலிறகால் எழுதப்படுமோ, அல்லது எங்களுடைய எலும்புகளை எடுத்து அதை இரத்தத்திலே தோய்த்து எழுத வேண்டுமோ—எங்களுக்குத் தெரியாது!

ஆனால், அவைகளுக்கும் தயாராகத்தான்—எத்தகைய புரட்சிகளையும், அடக்குமுறைகளையும், வேதனைகளையும் சமாளித்து திராவிட நாடு பெறுவதற்குத்தான்—தாய் திருநாட்டை மீட்பதற்காகத்தான் இன்றையதினம் திராவிட முன்னேற்றக் கழகம் என்கிற விடுதலை அணிவகுப்பு நடைபோடுகிறதே தவிர, ஏதோ சட்ட மன்றத்திற்குச் சென்று. அவர்கள் தருகிற 150 வெண் பொற்காசுகளை கண்டு-"ஆகா! எவ்வளவு அழகான பணங்கள்! வாழ்நாளிலேயே கண்டது கிடையாதே!" என்று ஏங்கி, புளகாங்கிதம்அடைந்து, சட்டசபையிலே விசிறிக் கொண்டிருக்கின்ற அழகான மின்சார விசிறிகளுக்கிடையே, பட்டு மெத்தைகளுக்கிடையே சுகம் காண அல்ல!

"நம்முடைய பாக்கியமே பாக்கியம்! முதன்மந்திரிக்கு நேராகவல்லவோ அமர்ந்திருக்கிறோம்! சபா நாயகருக்கு எதிராக அல்லவோ வீற்றிருக்கிறோம்! எதிரே செட்டி நாட்டு அரசர்—அவரது வீட்டிற்குச் சென்றால் சரிநிகர்சமானமாக அமரமுடியுமா? குட்டி குபேரராயிற்றே; அவருக்கு நேராக அமர்ந்திருக்கிறோமே! எவ்வளவு பெரும் பேறு செய்திருக்கிறோம்!" என்று மகிழவும் அல்ல; பூரிக்கவும் அல்ல!

எங்களுக்குத் தெரியும், அங்கே நாங்கள் அமர்ந்திருக்கின்ற நேரத்தில், தென்னகத்தில் புயலும், மின்னலும், இடியும், மழையும், விடுதலை வேட்கையும் கொழுந்துவிட்டு எரிகிற அளவுக்கு லட்சோப லட்சம் இளைஞர்கள் எங்களுக்குப் பின்னால் இருக்கிறார்கள்; அவர்களுடைய துணையோடு சாதிக்கவேண்டிய காரியங்கள் எத்தனை எத்தனையோ இருக்கின்றன; இந்த நாட்டினுடைய விடுதலையை சிரமேற் கொண்டு திராவிடத் தாயினுடைய, தமிழன்னையுடைய விலங்கொடிப்பதற்காக நாம் வகுத்திருக்கின்ற படையிலே நாமும் வீரர்கள்—என்பதை நாங்கள் மறக்க முடியாது! அங்கே யிருக்கின்ற மின்சார விசிறிகள் சுற்றுகின்ற நேரத்திலே எங்களுடைய தலையும் சுற்றிக் கொண்டுதானிருக்கிறது. எப்படி? இந்த நாட்டினுடைய அவல நிலைமையை நினைத்து நினைத்துச் சுற்றிக் கொண்டிருக்கிறது! பட்டு. மெத்தையிலே அமர்ந்திருக்கின்ற நேரத்தில், "எவ்வளவு அழகான மெத்தை! எத்தனை ஒய்யாரமான ஆசனம்!" என்றல்ல நண்பர்களே; எண்ணிக் கொண்டிருக்கிறோம்; முள்ளிலும், கல்லிலும் ஆயிரக் கணக்கான திராவிடப் பாட்டாளி மக்கள் அளவற்ற இன்னல்களை அனுபவிக்கிறார்கள்; அவர்

❋ தொடர்ச்சி 9-ம் பக்கம்

## சட்டசபையில் நிதி அமைச்சர்(!)

தி. மு. கழகத்தினருக்கு சட்டசபையில் பதில் சொல்ல எமது பெண் உறுப்பினர்களே போதும் என்று அலட்சியச் சொல் உதிர்த்தார்; கடற்கரையில் சுப்பிரமணியம்!

மந்திரியாரே நம்மைப் புகழ்ந்து விட்டாரே என்று தப்புக் கணக்கில் அம்மையார்கள் சிலர்—

**"அத்தைக்கு மீசை" "கண்ணிலே விளக்கெண்ணெய்" "ஊருக்கு உபதேசிகள்" "கையில் ஊமைகள்" "போற்றியோர் தூற்றியோர்" "வாய்மை யற்றோர்"**

என்பதுபோன்ற கேலிக் கணைகளைப் பூட்டினர். தன் பெண்ணை அடக்கி வைக்காமல் அடுத்த வீட்டு வாலிபன்மீது சீறிப் பாய்ந்த தகப்பன்போல எதிர்க் கட்சிகளுக்கு அறவுரை போதிக்க அமைச்சர் சுப்பிரமணியனார் புறப்பட்டார்; சட்டசபையில்—பாபம்; அந்தோ! அதுமட்டுமா! தி. மு. க. வினருக்குப் பதில் கூற பெண்களே போதுமென்றவர்; அண்ணா பேச்சுக்கு "ஓர் இரவு" முழுதும் மறுப்பு தயார் செய்து மறுநாள் வந்து பதிலுரை பகன்றிட முயன்றார்! அந்தோ; பாதி உரைக்கும் விளக்கம் அளித்தாரில்லை!

*சரிந்த செங்கோட்டையிலிருந்து . . .*

# குட்கஞறு திட்டம் தேவை!

❀ 2-ம் பக்கத் தொடர்ச்சி

படிப்பட்ட நிலைமைபற்றி கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையில் குறிப்பிட மறந்தது வருந்தத் தக்க ஒன்று.

## நிலச் சட்டத்தில் திருத்தம் தேவை!

நெருக்கடிக்கு ஆளாகி இருக்கக் கூடிய விவசாயிகளுக்கு என்ன செய்யப்பட வேண்டும் என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகின்றேன். உயர் நீதி மன்றம் ஜுலை மாதம் மூன்ருவது வாரத்தில்வழக்கை விசாரணைக்கு எடுத்துக் கொள்வதற்கு முன்னதாக புதிய ஒரு திருத்தச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டும்; அதையும் துரிதமாகக் கொண்டுவர வேண்டும்; ஏழைத் தொழிலாளர்களுடைய, ஏழை விவசாயிகளுடைய அவல நிலைமையை நீக்குவதற்கு இந்த அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறது என்பதைப்பற்றி கவர்னர் அவர்களுடைய உரையில் ஒன்றுமே இல்லை என்பதை மிகவும் கவலை கொண்டு தெரிவித்துக் கொள்கிறேன்.

## தெற்கின் விளைவு வடக்கே!

அடுத்து உணவுப் பற்ருக்குறை நிலையைப் பற்றியது! கவர்னர் அவர்களுடைய உரையில் உணவு விலை குறையவில்லை என்று குறிப்பிட்டாலும், உணவு விலை அதிகமாகிக் கொண்டிருக்கிறது என்பதை மறுக்க இயலாது! எங்குபார்த்தாலும் உணவு விலை விஷம் போல் தினம்-தினம் ஏறிக் கொண்டு இருக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்பதைக் கவனிக்க வேண்டும். ஆந்திராவிலுள்ள பெருவாரியான உபரி அரிசி தமிழகத்திற்குப் பயன்படாமல்; வடநாட்டில் சோளப் பஞ்சம் ஏற்பட்டிருக்கின்ற காரணத்தால் அங்கு எடுத்துச் சொல்லப்படுகிறது. அங்குள்ள கோதுமையைக் கொண்டு வடக்கே சரிக்கட்டுவதற்குப் பதிலாக, ஆந்திராவிலுள்ள உபரியான அரிசியை தமிழ் நாட்டிற்குப் பயன்படாத முறையில் எடுத்துச் சென்றதானது இங்கு விலைவாசி உயர்வுக்குக் காரணமாக இருக்கிறது. இதைப்பற்றி கவர்னர் அவர்களுடைய உரையில் எந்த விதமான குறிப்பும் காணப்படவில்லை. இப்படி விலைவாசிகள் உயர்வதற்கு எப்படிப்பட்ட வழி வகை செய்யப்படும் என்பதும் சொல்லப்படவில்லை.

## கவனிக்கப்படாத குடகஞறு திட்டம்!

உணவு நிலைமையைச் சமாளிப்பதற்கு சர்க்கார் உணவுப் பெருக்கத்திற்குத் திட்டங்கள் செய்ய வேண்டும். இந்த சர்க்கார் கையில்லாத ஊமையின் நிலையில்தான் இருக்கிருர்கள். தங்களுடைய நிலைமை என்ன என்று சொல்ல முடியாமல், ஊமையாக இருந்து—சுட்டிக் காட்டுவதற்கும் கையற்ற முறையில் இருந்து கொண்டிருந்தால் உணவு நிலை பற்ருக்குறை இதுபோன்றே எப்பொழுதும் நீடித்துக் கொண்டேயிருக்கும். இத்தகைய நிலைமைகளிலிருந்து திராவிடம் விடுபட்டு, திராவிடம் தனித்து, செழித்து நின்று, வளம்பெற, வாழ, நல்ல முறையில் திட்டங்களைத் தீட்ட வேண்டும். அதற்கு குறிப்பாக—உதாரணத்திற்காக ஒன்றை மட்டும் சொல்கிறேன். குடகஞறு திட்டம் தேவை என்ற முயற்சி ஒன்று குளித்தலைத் தொகுதியில் 1952-ம் ஆண்டு முதற்கொண்டே இருந்து வருகிறது. அதைப் பற்றி அடிக்கடி எடுத்துச் சொல்லப்பட்டு வருகிறது. கனம் முதலமைச்சர் அவர்களிடமும், கனம் ரிவினியூ அமைச்சர் அவர்களிடமும், கனம் மராமத்து அமைச்சர் அவர்களிடமும், நிதிஅமைச்சர் அவர்களிடமும், பல தடவை பல மனுக்கள் மூலமாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. அங்குள்ள பி. டபிள்யூ. டி. சூப்ரவைசர் அவர்கள், இந்தத் திட்டத்தை எடுத்துத் துரிதமாக நிறைவேற்ற வேண்டும் என்பதை ஆய்ந்து சொல்லியிருக்கிருர். அழகாபுரி என்கிற இடத்தில் ஒரு அணை கட்டினுல் அதன் மூலமாக சுமார் பத்தாயிரம் ஏக்கர் புஞ்சை நிலத்தை நஞ்சையாக மாற்றக்கூடிய வசதி இருக்கிறது. அதற்கு பனிரெண்டு லட்சம் ரூபாய் செலவாகும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இது கவனிப்பார் அற்றுக் கிடக்கிறது. இப்படிப்பட்ட நல்ல திட்டங்களை எல்லாம் கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையில் சிறிதும் குறிப்பிட வில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன்.


உள்நாடு
ஆண்டு சந்தா ரூ. 6—50
ஆறு மாதம் ரூ. 4—0
வெளிநாடு
ஆண்டு சந்தா ரூ. 7—50
ஆறு மாதம் ரூ. 4—50


# கூம்பிய தாமரை...

❀ 5-ம் பக்கத் தொடர்ச்சி

திடீரென்று தோன்றி, புலன் மாற்றிப் போட்டாளே. அப்பொழுதும்கூட அவளிடம் தனக்கு ஏற்பட்டிருக்கும் 'பிரேமை' எப்படிப்பட்டது என்பதை அவன் உணரவில்லை. யாரோ ஒருவன் அவளுக்குக் கணவனுகப் போகிருன் என்பதை அறியும் இப்பொழுது மட்டும் நெடுங்காலமாகப்பாடுபட்டுச் சேமித்த நிதியை கள்வனொருவன் திடீரென்று வந்து கொள்ளையடித்து விட்டது போன்ற ஏக்கம்—கலக்கம்—அவன் உள்ளத்தில் தோன்றியது.

ஓவியத்தைத் துடைத்தான்; சூரியன் மலைவாயிலில்மறைந்து கொண்டிருந்தான்—தாமரையின் முகம் கூம்பியது! ஓவியம் இப்பொழுது புதிய விளக்கம் கொடுத்துக் கொண்டிருந்தது.

திருமண அழைப்பிதழாவது அவனை நாடிவருமென்று எதிர் பார்த்தான், பயித்தியக்காரன்! அது அவனை நாடி வரவில்லை!

தெருக்கோடியிலிருக்கும் அந்த கம்பீரமான மாளிகைக்கும், ஓலைகள்கூட ஒழுங்காக வேயப்படாத அவனுடைய குடிலுக்கும், 'கலை'—'காதல்' ஆகியவற்ருல் தொடர்பு உண்டாகி யிருக்கலாமோ – என்ற அவனுடைய அற்ப ஆசையும் முறிந்துபோயிற்று! கலைஞன், கலைஞனகவே இருந்தான்!

மங்கல வாத்தியங்கள் முழங்கின; இசைக் கருவியிலிருந்து எழுந்த மோஹனமும், கல்யாணியும் அவன் காதுகளில் முகாரியாகவே ஒலித்தன; அவனுல் அந்த வேதனையைத் தாங்க முடியவில்லை; ஓவியத்தை ஒரு துணியில் சுற்றி கையில் எடுத்துக்கொண்டான். மல்லிகையைப் பறித்துப் பையில் போட்டுக்கொண்டான். குடிசையை விட்டுப் புறப்பட்டான்!

வேகமாக கிராமத்தைத் தாண்டி எங்கோ நடந்து கொண்டேயிருந்தான். திருமணம் விசாரிக்கச் செல்லும் பெரிய மனிதர்களின் கார்கள் புழுதியைக் கிளப்பி வேகமாகச் சென்று கொண்டிருந்தன.

* * *

மிஸ். சுந்தரி, இப்பொழுது மிஸஸ் சுந்தரி மோஹன்! அவள் அந்த நகரின் மாதர் சங்கம், சமூக நலஅபிவிருத்திக் கழகம், கலைக் கழகம் ஆகியவற்றின் தலைவி. மோஹனும் அவர் மனைவியும், அந்த ஜில்லாவில் கலையைப் புனருத்தாரணமே செய்து விட்டார்கள் என்று மக்கள் பேசிக் கொண்டனர்.

அன்று கலைக் கண்காட்சித் திறப்பு விழா! மோஹன் திறந்து வைக்கிருர்; திருமதி மோஹன் கலைக் கண்காட்சி விழாவில் பரிசு பெற்ருேருக்குப் பரிசு வழங்க வேண்டும்! திறப்பு விழா நடந்தது. கலெக்டரும் அவர் மனைவியும் காட்சிப் பொருட்களைப் பார்வையிட்டுக் கொண்டே சென்றனர். ஒரு ஓவியம்; கலெக்டரின் உள்ளத்தைக் கவர்ந்தது.

"சுந்தரி, இந்தப் படத்தைப் பார்! கற்பனையும் கைத்திறனும் ஒன்றை யொன்று மிஞ்சுகின்றன...!"

அவள் ஆவலோடு சென்று அந்தப் படத்தைப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் துளித்தது; கைகள் நடுங்கின. உதடுகளைக் கடித்து பீறிட்டு வரும் அழுகையை அடக்கிக் கொண்டாள்.

ஆதவன் மறைவால் தாமரை கூம்பிடும் காட்சி — அதே ஓவியம்!

அவள் ஏதும் பேசவில்லை! பேச முடியவில்லை! வேடிக்கை பார்க்க வந்திருந்த பெண்ணொருத்தி தலையில் வைத்திருந்த மல்லிகையின் மணம் 'கம்' மென்று வீசியது.

கலெக்டர் மோஹன், கண்காட்சியின் காப்பாளரை அழைத்தார். "இவ்வளவு அற்புதமான ஓவியத்தைத் தீட்டிய கலைஞரை நான் பார்க்க வேண்டும்; தயவு செய்து அவரை அழைத்து வாருங்கள்," என்ருர்.

"ஏன்சார், அந்தக் கொடுமையைக் கேட்கிறீர்கள். இதை வரைந்தவன் ஒரு பைத்தியக்காரன்...!"

"என்ன; பைத்தியமா?" என்ருள் சுந்தரி.

"ஆமாம் அம்மா; ஒரு வாரத்திற்கு முன்புதான் ஒரு பைத்தியக்காரன் இந்தப் படத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, 'சூரியன் மறைந்தான்—தாமரை வாடியது' என்று திருப்பித் திருப்பிப் பாடிக் கொண்டே வந்தான். இந்தப் படத்திற்கும் அவனுடைய பைத்தியத்திற்கும் ஏதோ தொடர்பிருக்க வேண்டுமென்று டாக்டர் சொல்லுகிருர்...."—கண்காட்சியின் காப்பாளர் கதையைச் சொன்னுர்.

"இப்பொழுது அந்த ஓவியர் எங்கே யிருக்கிருர்?" என்ருள் சுந்தரி குரல் நடுங்க.

"பைத்தியக்கார ஆஸ்பத்திரியில்!"—பதிலளித்தார் காப்பாளர்.

சுந்தரியின் கண்களில் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது. மனைவியின் கலையார்வத்தையும் கருணை யுள்ளத்தையும் கண்டு பரவசமடைந்தார் கலெக்டர்!

# சுகங்காண அல்ல; நல்ல செயலாற்றவே சென்றோம்!

✻ 7-ம் பக்கத் தொடர்ச்சி

களுடைய வாழ்வெல்லாம்—நலமெல்லாம் பெருக நாம் எத்தகைய தியாகத்தைச் செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம்—என்பதையும் எண்ணுமையில்லை, எங்கள் சிந்தை!

சட்ட மன்றத்தை உதறி எறிந்துவிட்டு 'வெளியே வா' என்று நீங்கள் அழைக்கிற நேரத்திலே வெளியே வந்தே தீருவோம்! எங்களை அனுப்பியவர்கள் நீங்கள்; உங்களுக்காக அனுப்பியிருக்கிறீர்கள்; இந்த நாட்டுக்காக அனுப்பியிருக்கிறீர்கள்! இந்த நாட்டினுடைய விடுதலைக்கு அங்கும் ஏதாவது செய்ய முடியுமா என்பதற்காக அனுப்பப்பட்டிருக்கிறோம்! அப்படி அனுப்பிய நீங்கள் என்ன கட்டளையிடுகிறீர்களோ, அவைகளை சீர் தூக்கிப் பார்த்து; அந்தக் கட்டளையை நிறைவேற்றுகின்ற காரியத்தில் ஈடுபடுவோம் என்பதைத்தான் நான் சொல்ல விரும்புகிறேன்!

காங்கிரஸ்காரர்கள் வெற்றி பெற்று, அல்லது வேறு கட்சிக்காரர்கள் வெற்றி பெற்று, அவர்களுக்கு பாராட்டு விழா நடைபெறுகிறது என்றால் ஐந்தாண்டு காலத்திலே ஒரு முறை நடைபெறலாம்! இன்னொரு முறையும் நடைபெறலாம், அவர்கள் பதவியை இழக்கிற நேரத்தில், 'நல்லவேளை; உங்களுடைய பதவி இதோடு முடிந்து விட்டது' என்று மக்கள் பாராட்டலாம்! நாங்கள் அப்படி அல்ல; இந்த ஐந்தாண்டு காலத்தில் தி. மு. கழக சட்டசபை உறுப்பினர்களுக்கு பலமுறை நிச்சயமாக பாராட்டு விழா நடத்தப் போகிறீர்கள். எதற்காக? 'இந்தப் போராட்டத்திலே இவர்கள் சிறைக்குச் சென்றார்கள்; அந்தப்போராட்டத்திலே அவர்கள் சிறைக்குச் சென்றார்கள்!' என்ற காரணம் காட்டி, நாங்கள் சிறைக்குச் சென்று விடுதலை அடைந்து வருகின்ற நேரத்திலே விடுதலை விழாக்கள் நீங்கள் நடத்தத்தான் போகிறீர்கள்! நாங்கள் மறந்துவிட மாட்டோம்; தேம்பி அழுகின்ற எங்கள் தாயை மறந்து விட மாட்டோம்; விலங்கு கையிலே ஏந்தி யிருக்கின்ற எங்களைப் பெற்ற மாதாவை மறந்துவிட மாட்டோம்; எங்களைப் பெற்ற மாதா தங்க நிறமுடையவள்; கோலாரிலே தங்கம் குவிந்து கிடக்கிறது! அவளைச் சுற்றிலும் மூன்று பக்கத்திலும் பெரிய கடல்கள்; அவைகளிலே முத்துக் குலுங்கிக் கிடக்கிறது! காவேரி, தென்பெண்ணை, பாலாறு—வற்றாத வளமுள்ள நதிகள் இருக்கின்றன—இவைகளெல்லாம் இருந்தும் எங்கள் மாதா அடிமையாம்; அடிமையாம்! காமராஜர் எழுகின்ற நேரத்திலும், என்றைக்காவது எழுந்தால்—சுப்பிரமணியம் பேசுகின்ற நேரத்திலும்-பக்தவத்சலம்எங்களைப் பார்த்து மிரட்டுகிற நேரத்திலும் - காங்கிரஸ்காரர்கள் உறுமுகின்ற நேரத்திலும்-நம் தாய் அடிமையாகிக் கிடக்கிறாள்; அவள் கூண்டிலே பூட்டப்பட்டுக் கிடக்கிறாள்; அவளை விடுவிக்க வேண்டிய பெரும் பொறுப்பிலே நாங்களிருக்கிறோம்—என்பதை எள்ளளவும் நாங்கள் மறந்து விடமாட்டோம்! நாங்கள் உங்களவர்கள்; தமிழர்கள்; திராவிடர்கள்; இந்தத் தரணியின் சொந்தக்காரர்கள்; தரணியை மீட்டிடும் கவலையை மேற்கொண்டிருப்பவர்கள்; அதற்காகவே இந்த உயிர் இருக்கிறது; அதற்காகவே இந்தக் கண்கள் இருக்கின்றன; அதற்காகவே இந்தக் கரங்கள் இருக்கின்றன; அதற்காகவே தேகம் எடுத்துவிட்டோம்; என்கின்ற அத்தகைய உயர்ந்த நோக்கத்தை—அத்தகைய விடுதலை வேட்கையைப் பெற்றுத்தான் சட்ட மன்றத்திலே அமர்ந்திருப்போம்—என்பதை தயவு செய்து தாய்மார்களே, பெரியோர்களே, பேரன்புகொண்ட இளைஞர்களே, மறந்துவிடாதீர்கள்! மறந்துவிடாதீர்கள்! சட்ட மன்றத்திலே திராவிடத்தின் விடுதலைக் குரல் கேட்கிறதென்றால் 'இப்படி ஒரு நாள் வருமா?' என்று நாம் ஒரு நாளும் நினைத்ததில்லை. இந்த நன்னாள், பதினைந்து பேரோ அமர்ந்திருக்கின்ற நாம், திராவிட நாட்டினுடைய விடுதலையைப் பெற்ற படை வீரர்களாக, திராவிட நாட்டின் மந்திரிகளாக, திராவிட நாட்டை அரசோச்சுபவர்களாக, அமர்ந்திருக்கின்ற காலம் வரப்போகிறது என்பதற்கு அறிகுறியாகும்!

15 பேர்—எண்ணிக்கையிலே குறைவுதான்; ஆனால் இந்தப் பதினைந்து பேரை அனுப்பியிருக்கிறவர்களோ 17 லட்சம் வாக்காளர்கள்! காங்கிரசுக்கு அடுத்தபடியாக அதிக வாக்காளர்களை — அதிக ஆதரவைப் பெற்றிருப்பவர்கள், நாம்தான்!

இந்தத் தேர்தலிலே மூன்று பெரிய இயக்கங்கள் போட்டியிட்டன. காங்கிரஸ்; திராவிட முன்னேற்றக் கழகம்; கம்யூனிஸ்ட்டுகள். காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டியைப் பற்றிக் கவலையில்லை. பதவி இல்லாத காரணத்தால் உற்பத்தியான கட்சி அது; பதவி கிடைத்தால் ஒட்டிக் கொண்டாலும் ஒட்டிக் கொள்ளும்! முன் சொன்ன மூன்று இயக்கங்களில் காங்கிரஸ்காரர்கள் இழந்ததைப் பெற்றவர்கள்; திராவிட முன்னேற்றக் கழகத்தார் இல்லாததைப் பெற்றவர்கள்; கம்யூனிஸ்ட்டுகள் இருந்ததை இழந்தவர்கள்! இது தான் தமிழ் நாட்டினுடைய அரசியல் கணக்கு!

இன்றைய நிலையில் அதை எப்படிச் சொல்கிறேன் என்றால் நாம் இல்லாததைப் பெற்றோம். இது வரையில் சட்டமன்றத்திற்கு செல்லுவதில்லை என்ற முடிவோடு இருந்தோம். இப்போது எடுத்த எடுப்பிலேயே 15 பேர் சென்றிருக்கிறோம்! கம்யூனிஸ்ட்டுகள் சென்ற தடவை 30 பேரோ, 40 பேரோ இருந்தார்கள்சட்டமன்றத்தில். இன்றைய தினம் விரல் விட்டு எண்ணக் கூடிய அளவுக்கு—ஒரு கை கூடத் தேவையில்லை; விரலை மடக்கி விடலாம்; நாலே பேர் இன்றைய தினம் இருக்கிறார்கள்! ஆகவே அவர்களை இருந்ததை இழந்தவர்கள் என்று குறிப்பிடுகிறேன், அண்ணா குறிப்பிட்டதுபோல்! மூன்றாவது காங்கிரஸ்காரர்கள்—சென்ற தேர்தலில் இவர்கள் பெற்ற இடங்கள் மிக மிகக் குறைவு. குறைந்த இடங்களைப் பெற்று, மந்திரி சபை அமைக்க முடியாமல், யார் யாரை இணைக்கலாம் என்று தேடி, பிரகாசத்துடைய ஐக்ய முன்னணிக்கு எதிராக பலரை பல இடங்களிலிருந்து வரவழைத்து,'உனக்கு மந்திரிப் பதவி தருகிறேன்; 'உனக்கு இன்னின்ன சலுகைகள் தருகிறேன்' என்று ஆட்களைப் பொறுக்கி, எலும்புத் துண்டுகளுக்கும், பதவி இறைச்சிக்கும் ஆசைப்படுபவர்களை எல்லாம் தன்னோடு இழுத்துக் கொண்டு, ஒரு பக்கத்திலே மாணிக்க வேலரை; இன்னொரு பக்கத்திலே வேறு பல சுயேட்சைகளை; சொல்லப்போனால் துரோகிகளை தன்பால் இழுத்துக்கொண்டு, திக்குத் திணறி, வக்கு வழியின்றி, அம்மாதிரி அவமானகரமான செயலைச் செய்து மந்திரி சபையை அமைத்தார்கள். காங்கிரஸ் எதிர்ப்பாளர்களை எல்லாம் காங்கிரஸ்காரர்களாக ஆக்கி—அவர்கள் போட்டிருந்த அழகான பட்டுச் சொக்காய்களைக் கழற்றிவிட்டு, கதர் சட்டைகளை மாட்டி-தலையிலே இருக்கிற கோளாறு தெரியாமல் இருப்பதற்காகத் தொப்பிகளையும்கவிழ்த்து-ஆட்சிபீடம் ஏறினர்,

இன்றையதினம் அதே காங்கிரஸ், அதிக இடங்களைப் பெற்று மந்திரி சபை அமைத்திருக்கிறது; அதனால் தான் இழந்ததைப் பெற்றவர்கள் என்கிறேன்; ஆனால் உயர்ந்தவர்கள்-மதிப்புள்ளவர்கள் பெருமைப்படத் தக்கஅளவுக்கு நடந்துகொண்டு பெற்றார்கள் அதிக இடங்களை-என்று கூறிவிட முடியாது.

ரஷ்யா போன்ற மேல்நாடுகளிலே இப்போது விஞ்ஞான ரீதியிலே புதியதொரு மருத்துவ முறை கண்டு

# இழந்ததைப் பெற்றூர்கள்; இனி பெற்றதை இழப்பார்கள்!

பிடிக்கப்பட்டிருக்கிறதாம். 50 வயதோ 60 வயதோ ஆன குடும்பத்தின் தலைவன் ஒருவன் திடீரென்று அகால மரணமடைந்து விட்டால்— சொத்துக்களைப் பற்றி எந்த விதமான ' 'உயி'லும் எழுதாமல் மறைந்து விட்டால்— 'ஐயோ! சொத்துக்களைப் பற்றி விவரம் சொல்லாமல் போய் விட்டானே' என்று கவலைப் படக்கூடிய நிலைமையைமாற்றியிருக்கிறார்கள். விஞ்ஞான ரீதியிலே, புதிய கண்டுபிடிப்பின் மூலமாக, இறந்து போனவனுக்கு அரை மணி நேரமோ, ஒரு மணி நேரமோ உயிரை வரவழைத்து—அயர்ந்து கிடக்கின்ற சுவாசப் பையிலும், நிரந்தரமாகத் தூங்கிவிட்ட இருதயத்திலும் கொஞ்சம் சூடேற்றி—உயிர் கொடுத்து—அந்தக் குறுகிய இடைக்காலத்திலே யார் யாருக்கு எப்படி எப்படி சொத்துக்களைப் பங்கு பிரிக்க வேண்டுமென்று எழுதி வாங்கிக் கொண்டு பிறகு அவனை சாகவிட்டு விடுவார்களாம்! அதே போன்ற 'விஞ்ஞான முறை'யில்தான் சென்ற தடவை இறந்து விட்ட காங்கிரஸ் 5 வருட காலத்திற்கு உயிர்ப்பிக்கப்பட்டிருக்கிறது! அந்த முறையிலே இப்போது இழந்ததையும் பெற்றிருக்கிறது இறந்தவன் உயிர் பெற்றிருக்கிறான்; ஐந்து வருடங்களுக்குப்பிறகு நிச்சயமாக செத்து விடுவதற்காகத்தான்— என்பதை அவர்கள் தேர்தலிலே நடந்துகொண்ட முறைகளினாலும், தமிழர்களைப் புறக்கணிகிறக் தன்மையாலும், திராவிடர்களை அலட்சியப் படுத்துகிற—துச்சமெனக் கருதுகிற காரணத்தாலும் நன்கு புலப்பட்டுவிட்டது. நிச்சயமாக அவர்கள் இனிமேல் தொடர்ந்து இந்த நாட்டை ஆளமுடியாது, தென்னாட்டைப் பொறுத்தவரை; திராவிடநாட்டைப் பொறுத்தவரை!

சுதந்திரம் பெற்றவர்கள் நாங்கள்தானே; உங்களுக்கு உரிமைகளை வழங்கியவர்கள் நாங்கள்தானே—என்று சட்டமன்றத்திலே கூவிக் கேட்கிறார்கள். இது எப்படி இருக்கிறது? "நான்தானே பெற்றேனடி மகளே, உன்னை! நான் அழைக்கிறேன்கட்டிலறைக்கு! வர மறுக்கிறாயே" என்று ஒரு அப்பன் கேட்டால் அது எவ்வளவு அவமானகரமானதோ அதைப்போலிருக்கிறது! நாங்கள்தானே உரிமையை வழங்கினோம்; அடங்கி நடவுங்கள் என்று கேட்கிறார்கள்! வெள்ளைக்காரன் கேட்டான்; முசோலினி கேட்டான்; ஹிட்லர் கேட்டான்; சர்வாதிகார வெறியர்களெல்லாம் கேட்டார்கள்; இப்போது காங்கிரஸ்காரர்களும் கேட்கிறார்கள்; என்ன அர்த்தம் அதற்கு? அது மாத்திரமல்ல, "எதிரே உட்கார்ந்திருக்கிற எதிர்கட்சிக் காரர்களெல்லாம் யார் தெரியுமா? இவர்களெல்லாம் வெள்ளைக்காரன், அயல்நாட்டுக்காரர்கள் இந்த நாட்டிலே தங்க வேண்டுமென்று சொன்னவர்கள்" என்று குறிப்பிட்டார்கள். அதற்கு நம்முடைய அறிஞர் பெருந்தகை அண்ணா அவர்கள் இன்று காலையிலே சட்ட மன்றத்திலே வெகு அழகாக பதில் சொன்னார்கள்; "காங்கிரசு நண்பர்கள் எதிர்க்கட்சிக்காரர்களெல்லாம் ஆங்கிலேயனது அடி வருடிகளென்று குறிப்பிட்டார்கள் அப்படி அவர்கள் சொல்லிய நேரத்தில் எதிர்க் கட்சியிலிருந்த எங்கள் முகங்கள் சுருங்கியதைவிட காங்கிரஸ் கட்சியிலிருந்த பலருடைய முகங்கள் சுருங்கியதைக் கண்டோம்" என்று. அங்கேதான் வெள்ளைக்காரனுடைய நிரந்தர ஏஜண்டாக இருந்த செட்டிநாட்டு அரசர் இருக்கிறார்; ஜஸ்டிஸ் கட்சியினுடைய தலைவராயிருந்த சாமியப்ப முதலியாருடைய மகன் இராமலிங்கம் உட்கார்ந்திருக்கிறார்; ஆர். கே. ஷண்முகம் செட்டியாருடைய அருந்தவப் புதல்வி சாவித்திரி சண்முகம் அமர்ந்திருக்கிறார். 150 பேரிலே 100 பேர் காங்கிரசை எதிர்த்தவர்கள் அமர்ந்திருக்கிறார்கள்! மிகுதி 50 பேரிலோ மில் முதலாளிகள் 20 பேர் இருப்பார்கள். ஒரு காமராசர், ஒரு சர்தார் வேதரத்தினம் பிள்ளை— இப்படிப் பொறுக்கி விடலாம் உண்மையான காங்கிரஸ்காரர்கள் இவர்களென்று!

தில்லையாடி வள்ளியம்மையின் பரம்பரை அங்கு இருக்கிறதா? செக்கிழுத்த சிதம்பரனாருடைய வம்சம் இருக்கிறதா அங்கே? பகவத்சிங்கின் பரம்பரையை காண முடியுமா அங்கே? திருப்பூர் குமரன் சந்ததி இங்கு இருக்கிறதா? கிடையாது;கிடையாது; தேர்தலிலே 10 லட்சம் செலவழிக்கக் கூடிய அளவுக்குத் தகுதி பெற்றவர்களும், ராஜாக்களும் 'சர்'களாக இருந்தவர்களும், திவான்களாக பவனி வந்தவர்களும், இன்றைய தினம் காங்கிரஸ் கொலு மண்டபத்திலே வீற்றிருக்கிறார்களே ஒழிய, உண்மையான காஙகிரஸ்காரர்கள் அங்கு எத்தனை பேர் இருக்கிறார்கள்? ஆகவேதான் சொல்கிறேன், இந்த விஞ்ஞான முறை இருதயம் 5 ஆண்டுகளுக்கு மேல் தாங்காது ; தாங்காது என்று! ஆனால் திராவிட முன்னேற்றக் கழகம் பெற்றிருக்கிற இந்த 15-ம் வளரக்கூடிய வித்தைக் கொண்டது; வளரக்கூடிய ஆற்றல் பெற்றது! அப்படி வளர்ந்து இந்த 15 நிச்சயமாக 150 ஆகும்; அதற்கு மேலும் ஆகும். அப்படி அதை ஆக்குகிற பெருமை—ஆக்குகின்ற கடமை— உங்கள் கையிலே இருக்கிறது! 17 லட்சம் கோடியாக மாற வேண்டும்; கோடானுகோடியாக மாறவேண்டும்; தென் புலத்திலே இருக்கின்ற திராவிட மக்கள் அத்தனை பேரும் திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய விடுதலை சேனைக்கு தங்களுடைய கையை உயர்த்தி ஆதரவு கொடுத்துவிட்டார்கள்! சிகப்பும் கருப்பும் கலந்த அந்தக் கொடியின் கீழே திராவிடப் படை வீரர்களுடைய அணி வகுப்பு திராவிடத்தைப் பெற்றே தீருவோம் என்று வடக்கு நோக்கி குரல் எழுப்பி விட்டது! அப்படி கிளம்பியிருக்கிற அந்தக் குரல் நேருவே வந்தாலும் அவரைவிட பெரிய மேருவே வந்தாலும், அகிலம் எதிர்த்தாலும், ஆழ்கடலே கொந்தளித்து எழுந்தாலும், எரிமலைகள் சீறினாலும், புலி பாய்ந்தாலும், சிங்கம் உறுமினாலும் திராவிட நாட்டின் விடுதலையிலிருந்து பின் தங்கோம்; பின்தங்கோம்! —என்றமுறையிலே அந்த குரல் எழும்பட்டும்! நாங்கள் படை வீரர்களே தவிர படாடோபக் காரர்கள் அல்ல; சட்ட மன்றத்திலே "திராவிடம், திராவிடம், திராவிடம்!" என்றே கூறிக்கொண்டிருப்போம் என்று உறுதி அளித்து உங்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்கிறேன்!

வணக்கம்.

★

---

## சட்டசபையில் நிதி அமைச்சர் (2)

தி. மு. கழகத்தின் வாதங்களுக்குப் பதில்கூற முயன்றபோது, அமைச்சர்—அடிக்கடி சினிமா, நாடகம் என்ற சொற்களைக் கேலியாகப் பயன்படுத்திக் கொண்டார்.

அப்போது; தேர்தல் பிரச்சாரத்துக்காக அவர்கள் எடுத்த 1400 அடி படமும், கிருஷ்ண மேனனுக்காக வடநாட்டு நட்சத்திரக் கூட்டம் வரிந்து கட்டிக் கொண்டு தேர்தல் பிரச்சாரம் செய்த செய்தியும்—நம் மனக்கண் முன்னே தோன்றி, மந்திரியாரை நையாண்டி செய்து கொண்டே இருந்தன. எதிர்க் கட்சியினர் பேசாததையெல்லாம் பேசியதாகக் கற்பனை செய்து கொண்டு "வக்கீல் வாதம்" புரிந்த விந்தையே விந்தை!

---

## திருச்சி மாவட்ட திராவிட முன்னேற்றக் கழக செயற் குழு கூட்ட அழைப்பு

அன்புடையீர்!

வணக்கம். நாளது 12—5—57 ஞாயிறு மாலை 3 மணிக்கு, திருச்சி திராவிடப் பண்ணையில் மாவட்ட செயற் குழுக் கூட்டம் நடைபெறும். அனைவரும் தவறாது வரவேண்டுமாய் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆய்வுக்கு வருபவை :—

1. பொதுத் தேர்தல் பற்றி விவாதித்தல்
2. உள் ஆட்சி மன்ற தேர்தல்பற்றி ஆலோசித்தல்
3. மாவட்ட மாநாடு பற்றி முடிவெடுத்தல்
4. புதிய கிளைகளை அங்கீகரித்தல்
5. செயலாளரால் கொணரப்படும் இதர தீர்மானங்கள்.

அன்பன்,

அ. பெ. தர்மலிங்கம்

செயலாளர்.

# போ..போ..போ!

"கிராமங்கள்தான் இந்த நாட்டின் உயிர்!"

யாருடைய குரலுக்கு இந்த நாட்டில் மதிப்பு அதிகமிருக்கிறது என்று சொல்லிக் கொண்டார்களோ—அந்த காந்தியார்தான் இந்தப் பொன்மொழியைச் சொன்னார்!

"உழைப்பிலேதான் ஆண்டவனைக் காண விருப்பமென்றால்,
அதோ—பாடுபட்டுப் பாடுபட்டு 'பலன் எங்கே?' என்று காத்துக் கிடக்கிறானே; உன் கிராமத்துப் பாட்டாளிச் சகோதரன்—அவனது முத்து முத்தான வியர்வைத் துளிகளிலே ஆண்டவனைக் கண்டு மகிழேன்...!"

—நோபல் பரிசு பெற்ற, மேதைத் தன்மை கொண்ட கவிஞர் தாகூர்தான் இப்படிச் சொன்னார்.

இப்படியெல்லாம் சொன்னவர்கள்—கிராமத்தை எழில் நிறைந்த இன்ப பூமியாக உருவாக்கிக் காட்டியவர்கள் — கவிதை உருவிலே, சொல் வடிவிலே சித்திரித்துத் தந்தவர்கள் — உண்மையிலேயே அன்றே செயலில் ஈடுபட்டிருந்தால்...இன்றைய தினம் 'நாட்டின் உயிர்' இந்தக் கோலத்திலா காட்சி தரும்?

கிராம மக்களிடம் நெருங்கிப் பழகிப் பாருங்கள்; எத்தனை அன்பான நெஞ்சங்கள்; துளியளவும் 'கறுப்பு' காணமுடியாத தூய உள்ளங்கள்! வியப்பாகக்கூடத் தோன்றும், பிரித்து வைக்கப்பட்ட வேற்று நாட்டு மக்கள் போல் கருதப்பட்டுக் கொண்டிருக்கும் அவர்களிடம் இத்தகைய வரவேற்கும் உள்ளமும், உபசரிக்கும் பண்பும் எங்கிருந்து வந்தது என்று!

இத்தனைக்கும் அவர்கள் எல்லாம் யார்?

உழவர் பெருங்குடி மக்கள்—
அன்றாடங்காய்ச்சிகள்—
பாடுபடும் ஏழைகள்—

இப்படிப்பட்ட உணவு தருவோர்—உடை கொடுப்போர்—ஊருக்கென்றே உழைப்போர்—ஏன் இன்னும் சமூகத்தின் அடித்தளத்திலேயே கிடந்து உழல்கிறார்கள்?

இந்தக் கேள்வி எந்த ஒரு உள்ளத்திலேயாவது எழுந்தால்...பின் யோசித்தால்......விடை கிடைக்கிறதோ, இல்லையோ; நிச்சயம் விழிகளில் நீர் நிறையும்!

அப்படி நொந்த உள்ளமும், நீர் சுரந்த கண்களையும் கொண்ட சிறுவன் ஒருவனைத்தான் நாம் இப்போது சந்திக்கப்போகிறோம்.

பெற்ற தந்தையையும், உயிருக்குயிரான சிற்றப்பாவையும், உடன்பிறந்த அண்ணன் குமரப்பனையும் ஏக்கக் கடலில் ஆழ்த்தி விட்டு, அதோ படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிறானே—அவன்தான் முத்து!

பிடிவாதம் பிடிப்பவனைப் போல புரண்டு புரண்டு படுக்கிறானே—அவனுக்குள்ள துயரந்தான் என்ன? பட்டணப் படிப்பு தனக்கு வேண்டாமென்கிறான் அவன்.

அவன் தந்தை உழைப்பாளிதான்-வயலிலே உழுது, பயிரிட்டு, விளைவை 'யாருக்கோ' தந்துவிட்டு நிற்கும் ஏமாளிதான்—ஆனால், அவனுக்கோ தன் அன்பு மக்களை யாவது வேறு வழியில் நடத்தி வைப்போம் என்ற ஆசை!

ஆகவேதான் கிராமத்துப் 'பஞ்சாங்கக்காரர்' கிருஷ்ணராம ஐயரிடம் நாள் ஒன்று பார்த்தான், பையன்களைப் பட்டணத்திற்கு அனுப்பலாம், படிக்க வைக்க என்று!

முத்து கிராமத்தை விட்டுப் புறப்பட்டான், ஏதோ பிரியக் கூடாத ஒன்றைப் பிரிந்து செல்கிறோமே என்ற ஏக்க உணர்ச்சியுடன்! "எனக்குப் பட்டணப் படிப்பு வேண்டாம்" என்று அப்பாவிடம் அடித்துச் சொல்லவோ அவனுக்குத் துணிவில்லை. "படித்தது போதும்!" என்று சொன்னாலே, "அடித்தது போதும்!" என்று அலறும் அளவுக்கு 'பூசை' கிடைக்குமோ என்ற பயம் வேறு!

என்ன செய்வான்? புறப்பட்டான், புத்தகப் பையைத்தோளில் தொங்கவிட்டபடி!

அன்புள்ள அப்பா, அம்மாவின் கண்கள் நீரைச்சிந்தின. "ஏரதுாக்கிச் செல்கின்றவனே! நாடு காக்கும் தலைவனாக நாளை மாறப்பா!" என்று ஆசி கூறிற்று அந்த கண்ணீர் வெள்ளம்!

பாசமுள்ள அண்ணனின் நேசக்கரம் அவன் கரத்துடன் பின்னிக் கொண்டிருந்தது. ஆனால் முத்துவோ தான் யாரும் துணையற்ற ஏதோ ஒரு நாச உலகத்திற்குச் செல்வதைப் போல உணர்ந்து நடுங்கினான். கிராமத்து சோலை வனங்களை விட்டு—ஆற்றோர அழகை மறந்து—பச்சைப் பசேல் என்ற வயல் வெளியை வெறுத்து—இவை அனைத்தையும்விட அப்பழுக்கற்ற கிராம மக்களின் தாய்மை நிறை நெஞ்சத்தை—துயர் மிக்க வாழ்க்கையை விட்டு விட்டு எங்கேயோ கண்காணா இடத்திற்குப் போகிறோமோ என்ற ஏக்கம் 'ஓகோ' என்று அழ வைத்துவிட்டது அவனை!

'அழாதே தம்பி, நான்தான் இருக்கிறேனே, உனக்கென்ன பயம்?' என்ற அண்ணனின் அன்புரையும் "நல்ல பிள்ளையா படிச்சு...நாலு பேர் மெச்சத் திரும்பணும், கண்மணிகளே!" என்ற பெற்றவர்களின் ஆசைக் குரலும், 'பயலுகளுக்கு அதுதான் குறைச்சலாமோ—வயல்ல இறங்குங்கடா கழுதைங்களாங்காம,வக்கீலாக்கப் போறானே, வக்கீலாக்க!' என்ற ஊர்ப் பெரும் பண்ணைக்காரரின் கேலி ஒலியும்கூட அவன் காதுகளில் ஒலிக்கவில்லை! ஆனால் அடிக்கடி அவன் செவிகளில் விழுந்து அவனை அழவைத்துக் கொண்டிருந்தது, ஓட்டுக் கேட்க வந்த யாரோ ஒருவருக்காக பண்ணையார் மேடையில் சொல்லிய அந்த வாசகங்கள்தான்:

"நரகம் தெரியுமோ உங்களுக்கு,
அதைவிடப் பயங்கரமாக—பாழாகக்கிடக்கிறது இக் கிராமம். காந்தி மகானே சொல்லி விட்டார் நாடு கிராமத்தின்உடல் என்று...தவறு; தவறு; கிராமம் நாட்டின் உயிர் என்று! ஆனால் நிலைமை என்ன?... இந்த நிலையை விரட்ட நீங்கள் நம்ப மாட்டுப்பெட்டிக்காரருக்கு ஓட்டுப் 'போட்டு விடுங்க... எல்லாம் சரியாகிவிடும்... ஆமாம்; அதுவே நல்லது... நமஸ்காரம்..."

மாட்டுப்பெட்டிக்காரருக்கு ஓட்டுக் கிடைக்கவில்லை; அவரது முதலைக் கண்ணீர் விழலுக்கிரைத்த நீராகி விட்டது; ஆனால் முத்துவைப் பொறுத்தவரை அவன் உள்ளத்துக் குமுறலை அதிமாக்கி விட்டது; அந்தச் சிறிய வயதில் 'வரக்கூடுமா?' என்று வியக்கத்தக்க வேதனையைத் தந்து விட்டது!

★

பட்டணமா இது, இயந்திர வாழ்க்கை! நிம்மதியற்ற சூழ்நிலை!

கிராமத்திலேஇருக்கும் அமைதி; மக்களிடையே தோன்றும் முகப் பொலிவு-ஒன்றையுமே காணோமே! இப்படியாக எண்ணியபடியே வகுப்பறையில் உட்கார்ந்திருந்த முத்துவுக்கு தமிழ் ஆசிரியரின் குரல் காதில் விழுந்தது.

"தம்பிகளே! இன்றைய தினம் உங்களுக்கு ஒரு கட்டுரைப் போட்டி வைக்கப்போகிறேன்! வெற்றி பெற்றால் பரிசு ஒன்று! பாராட்டு உண்டு! இன்று இரவு நீங்கள் எழுதி நாளையதினம் வகுப்புக்கு வரும்போது கொண்டு வர வேண்டும்! கட்டுரையின் தலைப்பு என்ன தெரியுமா?"

—எல்லா மாணவர்களுடைய கண்களும் ஆசிரியரின் மேல் நிலைகுத்தி நிற்க, காதுகள் அந்தக் கட்டுரைத் தலைப்பைக் கேட்கத் தயாராகின்றன.

"எனது இலட்சியம்!"

—ஆசிரியர் தலைப்பைத் தந்துவிட்டு வெளியே போய்விட்டார். பையன்கள் கலைந்து சென்றனர்.

ஆனால்...முத்து—அவன் மட்டுமே வகுப்புஅறையிலே உட்கார்ந்திருந்தான். "எனது இலட்சியம்"—"எனது இலட்சியம்!"-என்று அவனது வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

"என்ன முத்து, அப்படியே சிலை மாதிரி உட்கார்ந்துட்டே? வாடா கண்ணு 'ஹாஸ்ட'லுக்குப் போவோம்!..."

முத்து அண்ணன் குமரப்பனுடன் "ஹாஸ்டல்' அறைக்குள் நுழைந்ததை மற்ற மாணவர்கள் எல்லோருமே பார்த்தனர்.

ஆனால்......

பொழுது விடிந்தவுடன் ஒருவரும் முத்துவைக் காணவில்லை! "ஐயோ, தம்பீ, தம்பீ!" என்று அலறினான் அண்ணன்.

"ஆற்றோடு போனானோ; குளத்திலே விழுந்தானோ!..." என்று 'ஆருடம்' கேட்டனர் மாணவர்கள்!

தகவலறிந்த தமிழாசிரியர் ஓடோடி வந்தார். முத்துவின் அறையைச் சல்லடைப் போட்டுத் தேடினார். முத்துவின் பெட்டியிலே ஒரு காகித உறை கண்களில் தென்பட்டது.

அவர் அவசரமாக நடுங்கும் கைகளால் எடுத்தார்; உறையின் மேலே எழுத்துக்கள் தென்பட்டன. படித்தார், படபடப்புடன்.

"எனது இலட்சியம்"

முத்துவைக் காணோம்; ஆனால் அவனது 'இலட்சியம்' இருக்கிறது!

ஆசிரியர் உறையை உடைத்தார். அவர் கைகள் அவரையும் மீறி நடுங்கிக்கொண்டிருந்தன. குமரப்பன் குமுறிக்கொண்டிருந்தான்.

—சொர்ணம்

(அடுத்த இதழில் முடியும்.)

பிறைவானம்

# கடைசிப் பக்கம்

## எழுத்தாணி

கே. மாரிமுத்து; தஞ்சை

(?) அமைச்சர் சுப்பிரமணியம் இப்போது எந்த அளவு உயர்ந்திருக்கிறார்?

**அண்ணாவை "முதலியார்" என்று கிண்டல் செய்து குருசாமியின் அளவுக்கு உயர்ந்து (?) இருக்கிறார்!**

எஸ். எல். சோக்கலிங்கம்; கடலூர்

(?) தினமணி, மித்திரன் முதலிய ஏடுகளைப் பற்றி குருசாமி காரசாரமாகத் தாக்குவது ஏன்?

**அவர்கள் நமது செய்திகளுக்கு இடம் தருகிறார்களாம்! அதோடு-மணியம்மை கைதானதை முதல் பக்கத்தில் போட்டுவிட்டு, அவர் கைதானதை உள்ளே சிறிய செய்தியாகப் போட்டால் ஆத்திரம் வராமலா இருக்கும்; பாவம்!**

குமாரசாமி; பழனி

(?) வினோபாவின் பூமிதான இயக்க மகாநாடு இப்போது ஏன் கேரளத்தில் நடக்கிறது?

காங்கிரஸ்காரர்கள் அவரை உபயோகித்துக் கொள்வதற்குத்தான்!

பழனிச்சாமி; அவிசாவெள்ள

(?) காங்கிரஸ்காரர்கள், பூனை தன் குட்டியைக் கௌவுவது போல் கௌவுகிறார்கள் என்று நிதி மந்திரி கூறினாரே; எதை?

வேறு எதை? பதவியைத்தான் அவர்கள் அப்படிப் பக்குவமாகக் கௌவுவார்கள்!

கே. ஆரோக்கியம்; திருக்குடந்தை.

(?) "பூனை-குட்டியைக் கௌவுவது-எலியைக் கௌவுவது இரண்டுக்கும் வேறுபாடு உண்டு" என்று நிதியமைச்சர் சொன்னாரே...........

அட இருமய்யா! அது அவரது சொந்தச் சரக்கல்ல; அண்ணாவின் பேனா உதிர்த்த உவமை!

எஸ். கே. திருவேங்கடசாமி; காட்டு மன்னார் கோவில்

(?) பண்டித நேரு இப்போது மட்டும் ஏன் நெய்வேலி வருகிறார்?

நமது சுவரொட்டியின் விளைவு நண்பரே, சுவரொட்டியின் விளைவு!

---

வடாற்காடு மாவட்ட
தி. மு. கழக செயற்குழு கூட்ட அழைப்பு

★

அன்புடையீர்!

வணக்கம். நாளது 26—5—57 ஞாயிறு மாலை 3 மணிக்கு வேலூர் டவுன் ஹாலில் மாவட்ட செயற்குழுக் கூட்டம் நடைபெறும். அனைவரும் தவறாது வரவேண்டுமாய் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆய்வுக்கு வருபவை:

1. மாவட்ட மாநாடு பற்றி முடிவெடுத்தல்.
2. புதிய கிளைகளை அங்கீகரித்தல்.
3. செயலாளரால் கொணரப்படும் இதர தீர்மானங்கள்.

—முல்லை சத்தி
செயலாளர்.

---




ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும்,
மு. கருணாநிதி, 'முரசொலி' அச்சகம்,
4-128, மவுண்ட் ரோடு, சென்னை—6, தமிழ்நாடு.

